

# அஷ்டமி, நவமி
# எந்த
# மதத்திற்கும்
# சொந்தமில்லை

அஷ்டமி என்பது பிரதமி திதியிலிருந்து எட்டாம் நாள். நவமி என்பது பிரதமியிலிருந்து ஒன்பதாம் நாள். இந்த நாட்களில் கடவுளை எந்த ரூபத்தில் வேண்டுமானாலும் வழிபட்டால் அதிக பலன் கிடைக்கும்.

இந்த வழிபாடு முடிந்தவுடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்

திருமண வைபவங்களுக்கு:- சீர் முறுக்கு, சீர் அதிரசம், சீர் முள்ளுத் தேன்குழல், சீர் அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் செய்துத் தரப்படும்.

Sarathy

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை - 600 020
போன்: 412557

# கிளின்டன் ஆதரவு யெல்ட்சினுக்கு உதவுமா?



மாஸ்கோ அரசியலில் ஒரு சிக்கல் உருவாகியிருக்கிறது. 'நான் பெரியவனா, நீ பெரியவனா?' என்ற மோதல், அதிபர் யெல்ட்சினுக்கும், நாடாளுமன்ற சபாநாயகர் ருஸ்லான் காஸ்புலடோவுக்கும் உருவாகியிருக்கிறது.

''நீங்கள் இரண்டு பேருமே லாயக்கில்லை. உங்களுக்குள் ரகசிய உடன்பாடு வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்!'' என்று நாடாளுமன்ற உறுப்பினர்கள் முடிவுக்கு வந்தார்கள்.

அதிபர் ஆட்சி முறை வேண்டாம்; யெல்ட்சினின் பொருளாதாரக் கொள்கைகள் நாட்டுக்கு விரோதமானவை - என்று நாடாளுமன்ற உறுப்பினர்களில் சிலர் அவர் மீது குற்றம் சுமத்தி அவமரியாதை செய்யும் தீர்மானம் கொண்டு வந்தார்கள்.

காஸ்புலடோவையும் விட்டு வைக்கவில்லை. அவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்தார்கள்!

இரண்டுமே போதிய அளவு மெஜாரிடி இல்லாத காரணத்தால் தோற்கடிக்கப்பட்டன; ஆனால் குறைந்த அளவு ஓட்டு வித்தியாசத்தில்தான்.

ஏப்ரல் 25 ஆம் தேதி, தமது புதிய சமூக பொருளாதாரக் கொள்கைகள் மீது, மக்களின் கருத்தைக் கேட்டு கணிப்பு எடுக்கப் போகிறார் யெல்ட்சின்.

● என் சமூக - பொருளாதாரக் கொள்கைகள் எல்லாவற்றையும் அங்கீகரிக்கிறீர்களா?

● அதிபர் தேர்தலை விரைவில் நடத்த வேண்டுமா?

● நாடாளுமன்றத் தேர்தலை உடனே நடத்த வேண்டுமா?

- என்பதுதான் யெல்ட்சின் கருத்துக் கணிப்பில் கேட்கும் மூன்று முக்கிய கேள்விகள்.

மக்கள் யெல்ட்சினை அதிபராக ஏற்றாலும், அவரது கொள்கைகளை அங்கீகரிக்க மாட்டார்கள் என்கிறார்கள்.

அரசியல் சட்ட ஆட்சி முறையை ருஷ்யாவில் அமல் செய்ய வேண்டும் என்றும், யெல்ட்சினின் கொள்கைகளை உருவாக்க உதவிய அரசியல்வாதிகளை உதறித் தள்ள வேண்டும் என்றும் நாடாளுமன்றம் ஒரு தீர்மானம் போட்டிருக்கிறது.

சுப்ரீம் சோவியத் (இது ஒரு குட்டி பாராளுமன்றம் மாதிரி) யெல்ட்சினின் ஆணைகளை அரசியல் சட்டரீதியாக அணுகிய பிறகே அமல்படுத்த வேண்டும் என்று வலியுறுத்தியிருக்கிறது.

மக்களை நேரடியாகக் கருத்துக் கேட்பது சமூகத்தில் விரிசலை உண்டாக்கி, குழப்பத்தை விளைவிக்கும் என்ற கருத்து நிலவுகிறது. உதாரணம், யெல்ட்சினுக்கு ஆதரவாகவும், எதிராகவும் அணி பிரிந்து நிற்கும் கோஷ்டிகள், கிரெம்ளின் வாசலிலேயே அடித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டன. (யெல்ட்சின் ஆதரவாளர்கள், எதிர்ப்பாளர் ஒருவரின் மண்டையை உடைத்து, அவரும் நம்மூர் அரசியல் பாணியில் கட்டுப் போட்டுக் கொண்டு வந்து மறுபடி கலந்து கொண்டார்!)

யெல்ட்சினும் விடுவதாயில்லை. ஆனால் தமது கருத்தை வெளியிட நாடாளுமன்றத்தில் அவர் மைக்கைப் பிடித்த போது, குழறினார். காரணம் : மது போதை. இது அக்கிரமம் என்றனர் யெல்ட்சின் எதிர்ப்பாளர்கள். ஆதரவாளர்களோ, அவர் மிகவும் சோர்ந்து போயிருக்கிறார்; அம்மா இறந்த சோகம் வேறு என்று சமாதானம் சொன்னார்கள்!

இதற்கிடையில், டெலிவிஷனும், ரேடியோவும் அதிபரின் கட்டுப்பாட்டிலிருந்து, நாடாளுமன்றத்தின் கட்டுப்பாட்டுக்குள் வந்து விட்டன.

ஏப்ரல் 25 கருத்துக் கணிப்பு ஆவலோடு எதிர்பார்க்கப்படுகிறது.

அமெரிக்க அதிபர் கிளின்டன் சமீபத்திய செய்தியில், யெல்ட்சினுக்குத் தமது முழு ஆதரவையும் தெரிவித்திருக்கிறார். 'இப்போது ஆதரவு காட்டாவிட்டால் ரஷ்யாவும், யூகோஸ்லாவியா மாதிரி சிக்கலில் மாட்டிக் கொண்டு விடும்!'' என்று எச்சரித்திருக்கிறார் கிளின்டன்.

- எஸ்.வி.என்.

# சவால் விடுகிறார் சரத்குமார்!

சரத்குமார். சமீப கால சினிமாப் புயல். 'கோதா'வில் இறங்கிய ஒரே வருஷத்தில் அடுத்த சூப்பர் ஸ்டாராகப் பேசப்படுகிறவர். திரையுலகில், தயாரிப்பாளராக, விநியோகஸ்தராக, வில்லனாகவெல்லாம் ஒரு ரவுண்ட் வந்து விட்டு, தற்சமயம் ஹீரோவாக அறியப்படுகிறவர். தம் படத்தை வாங்கும் விநியோகஸ்தர்களுக்கு 'மினிமம் கேரண்டி' வழங்கும் அளவுக்கு 'ரசிகப் பிரசித்தர்'. 'சினிமாத் தோப்பில்' பழம் தின்று, கொட்டை போட்ட 'பெருந்தலை'களுக்கெல்லாம் இன்று தம்முடைய அதிரடிப் பிரவேசத்தால் சவால் விடுகிறவர். இனி, அவருடன் நீங்கள்!



பூந்தமல்லி ஹைரோடில், ஒரு புராதன பங்களாவில் சரத்குமார் 'டைவ்' அடித்துக் கொண்டிருந்தார். ஏறக்குறைய மிலிட்டெரி டிரெஸ். முகத்தில் பஞ்சு வைத்து வெட்டுக் காய மேக்-அப். அரைமணி இடைவிடாது சண்டை போட்டும், களைப்புத் தெரியவில்லை. புன்முறுவலுடன் 'ஹலோ'. கிட்டே வந்து, 'காப்பி சாப்பிட்டீங்களா?' கையில் கறுப்பு ஸ்டிக்குடன், 'ரெண்டு நிமிஷம் வெயிட் பண்ணுங்க, ஷாட் முடிச்சுட்டு வந்துடறேன்'. கிளாப் போர்டில் 'வேடன்'.

இருபது நிமிடத்தில் வந்து உட்கார்ந்தார். 'சொல்லுங்க' என்று கூறி விட்டுத் தாமே பேச ஆரம்பித்தார் :

''நடிக்க வந்து இன்னும் ரெண்டு வருஷம் கூட ஆகலை. ஹீரோவா பண்ண ஆரம்பிச்சி, இன்னும் பத்துப் படம் கூட வரலை. அதுக்குள்ள ஜனங்க மத்தில ஒரு மாதிரியான கவனம் எனக்குக் கிடைச்சிருக்கு. இது சரத்குமார் படம் அப்படீன்னு தனியா ஐடென்டிஃபை பண்ண ஆரம்பிச்சிருக்காங்க. ஐ ஆம் ஸோ ஹாப்பி!''

''அதுக்குள்ள உங்களுக்குன்னு ஒரு இமேஜ் ஃபார்ம் ஆக ஆரம்பிச்சிடுச்சி இல்ல?''

''ஆமா. எனக்குன்னு இல்ல; எந்த ஹீரோவுக்குமே சரி. ஸ்கிரீன்ல, முதல் வாட்டி என்ன மாதிரி நாம அப்பியர் ஆகறோமோ, அதை வெச்சு, அந்த க்ஷணமே இமேஜ் கிரியேட் ஆயிடுது. அந்த இமேஜுக்கு அரை இஞ்ச் பிசகி நடந்தோம்னா அவ்ளோதான்! அட்ரஸ் இல்லாம போயிடும்! ரஜினின்னா ஆக்ஷன், கமல்னா ஆக்டிங் அப்படீன்னு, என்ன சொல்றது... ஒரு ஃபார்முலாவை



ஜனங்களே வகுத்துக்கறாங்க. அந்த ரீதில என்னை ஆக்ஷன் கலந்த சென்ட்டிமென்ட் பண்ணக் கூடியவனா ஐடென்டிஃபை பண்ணியிருக்காங்க.''

''ஆனா, உங்க நடிப்புல ஆக்ஷன் மட்டுமே தூக்கலாத் தெரியற மாதிரி ஒரு ஃபீலிங்...''

''இருக்கலாம். எனக்கு அமையற கேரக்டர்ஸ் அது மாதிரி. ஆனா ஒண்ணு இதுவரைக்கும் வந்திருக்கற என் படங்கள் ஒவ்வொண்ணுலயும் கண்டிப்பா ஒரு மெஸேஜ் இருக்கும். ஆக்ஷன் மட்டும்தான் பண்ணுவேன்னு நான் அடம்பிடிக்கறதில்லை. ஆனா சண்டை இல்லாட்டா, டான்ஸ் இல்லாட்டா யார் வாங்கறாங்க படத்தை? 'குணா' மாதிரி கேரக்டர் பண்ணணும்னு எனக்கும் ஆசைதான். போணி ஆக வேணாம்?''

''அப்படிப் பார்த்தா, உங்க ஆக்ஷன் படங்கள் எல்லாமே சக்ஸஸா?''

''யெஸ். 85% வெற்றிதான்! ஒண்ணு ரெண்டு சரியாப் போகலை. அதுக்குக் காரணங்கள் இருக்கு. எனக்கும் அது தெரியும். ஆனா சிலவற்றை வெளிப்படையாச் சொல்ல முடியாது. ஒண்ணு நிச்சயம். ஜனங்களை ஏமாத்த முடியாது. நாம பெரிய ஸ்டார்; என்ன பண்ணாலும் ஜனங்க ஒத்துப்பாங்கன்னு நினைக்கறது மகா தப்பு. அந்த விஷயத்துல நான், என் படங்களைப் பொறுத்தவரைக்கும் ரொம்ப ஜாக்கிரதையா இருக்கேன்.''

''என்ன மாதிரி ஜாக்கிரதை?''

''ஸ்டோரி. அதுல என் கேரக்டர். எனக்கு ஒத்து வரக்கூடிய கேரக்டர்ஸ் இருந்தா மட்டும்தான் நான் ஒத்துக்கறேன். என்னோட அல்டிமேட் கோல் - ஜனங்களைக் கவர் பண்ணுவது. அப்புறம்... சினிமா வெறும் என்டர்டெயின்மென்ட் மீடியா இல்லை.

கொஞ்சமாவது எஜுகேட்டிவ்வா இருக்கணும்... யெஸ்... அது அவசியம்னு நெனைக்கறேன்.''

''எதுக்கு? காலேஜ் போரடிக்கிறவன்தானே மாட்னிக்கு வரான்?''

''எஜுகேஷன்னு நான் சொல்றது நீதி போதனை இல்லை. இப்படிப் பாருங்க... படத்துக்கு வர்றவன், அந்த ஹீரோ ஸ்தானத்துல, தன்னை வெச்சிப் பாப்பான். இது நேச்சுரல். அப்படி இருக்கறப்ப, நாம பண்ற ஹீரோ ரோலை, நேர்மையானவனா, இரக்கமுள்ளவனா, அநீதி கண்டு கொதிப்படையறவனாப் பண்ணினா, படம் பார்க்கிறவனுக்கு அது மனசுல நிக்குமா? நிக்காதா? அதே மாதிரி தொடர்ந்து படங்களை அவன் பார்த்துக்கிட்டே இருந்தான்னா அவன் மனசுக்குள்ள அந்த மாதிரி ஒரு நல்ல கேரக்டர் ஃபார்ம் ஆகுமா? ஆகாதா? இது எஜுகேஷன் இல்லியா?''

''வாஸ்தவம். கள்ளக் கடத்தல் பண்ணி, கிராமத்தைக் காப்பாத்தற கேரக்டர்ஸ்தானே இப்ப, நிறைய வருது? இது எஜுகேஷனா?''

''நோ. நோ. அது தப்புத்தான்! என் கேரக்டர்களைப் பொறுத்தவரைக்கும் I am always Alert. இன்னிக்கு எம்.ஜி.ஆருக்கு இத்தனை பேர் கிடைச்சிருக்குன்னா, அதுக்கு என்ன காரணம்? அதிர்ஷ்டமா? பாஸிடிவ்லி நோ. அவரோட காரெக்டர்ஸ்! அந்த வகைல அவர் சாதிச்சிருக்கறது எக்கச்சக்கம்! ஜனங்க நாடியை அவர் கரெக்டா புரிஞ்சு வெச்சிருந்தார்!''

''நீங்க இதுவரைக்கும் எதனா சாதிச்சிருக்கீங்களா?''

''நத்திங். இப்பத்தானே ஆரம்பிச்சிருக்கேன்? இன்னும் ரொம்பத் தூரம் போகணும். பட், எனக்கு ஒரு லட்சியம் இருக்கு. சுபாஷ் சந்திரபோஸ் பத்தி ஒரு படம் பண்ணணும்!''

''டாக்குமெண்ட்ரியா?''

''நோ. நோ. ஃபர்ஸ்ட் கிளாஸ் மூவியா பண்ணப் போறேன். அவர் மேல எனக்கு அபரிமிதமான காதல்! இந்த வருஷக் கடைசில அந்த ப்ராஜக்ட் ஆரம்பிக்கறதா இருக்கேன்.''

''யார் தயாரிப்பு?''

''இது மாதிரி பரீட்சார்த்தமான முயற்சிக்கெல்லாம் அடுத்தவர் தலைல கை வைக்க நான் விரும்பலை. அந்தப் படம் என் சொந்த ப்ரொடக்ஷன்ல வரும். ரிஸர்ச் ஆரம்பிச்சாச்சு. சில ஸ்காலர்ஸ் எனக்காக இந்தக் காரியத்துல தீவிரமா ஈடுபட்டிருக்காங்க. இன்னும் டைரக்டர் யாருன்னு முடிவு பண்ணலை. மூணு நாலு பேரை யோசிச்சிக்கிட்டிருக்கேன்.''

''ஆல் தி பெஸ்ட். போகட்டும். உங்க சமீபத்திய படங்கள் சில சரியாப் போகலையே?''

''நானே சமீபத்துல வந்தவன்தானே! எது சரியாப் போகலை? சூரியன் சூப்பர் சக்ஸஸ் மூவி. 'தாய்மொழி' ஓடலைன்னு சொல்றவங்க, ஏரியா டிஸ்ட்ரிப்யூட்டர்களைக் கேட்டுப் பாருங்க. 'ஆதித்யன்' கூட சுமாராப் போச்சு. தசரதன் ஓடலை. ஒத்துக்கறேன். ஆனா அதுக்கு வேற சில ரீஸன்ஸ். என்னன்னு கேக்காதீங்க!''

''அப்புறம்... உங்க ரசிகர் மன்றங்கள்... எக்கச் சக்கம் இல்லே?''

''ஆமா. ஆனா அவங்க வெறும் அரட்டை கும்பல் இல்லை. நல்ல காரியங்கள் நிறைய பண்ணிக்கிட்டிருக்காங்க.''

''உங்களுடைய அடுத்த படங்கள்...?''

''ஏழெட்டு வருது... முதல்ல வேடன். தொடர்ந்து ஐ லவ் இண்டியா, பேண்ட் மாஸ்டர்... எக்ஸட்ரா. தவிர ஒரு தெலுங்கு. இதெல்லாத்துக்கும் மேல கூடிய சீக்கிரம் பாலசந்தர் சார் படம் ஒண்ணுல நடிப்பேன்!''

''வெல்... அடுத்த சூப்பர் ஸ்டார்...?''

மெல்லச் சிரிக்கிறார்.

''ஐ டோண்ட் நோ!''

சந்திப்பு : பா. ராகவன்

## போட்டி முடிவு: எண் விளையாட்டு-1

சென்னை குரோம்பேட்டையில் வசிக்கும் வி. எஸ். சீதா தமது முழு விலாசத்தை வெளியிட வேண்டாம் என்று கோரிக்கை விடுத்திருக்கிறார். அவரது வேண்டு கோளுக்கு மதிப்பளிக்கிறோம்.

ஏழாவது மனிதன் சினிமா முதல் கடையேழு வள்ளல்கள் வரை ஏழு என்ற எண்ணை மையமாக வைத்து ஏராளமான அம்சங்களைப் பட்டியலிட்ட வி. எஸ். சீதா ரூ 250/- பரிசு பெறுகிறார். போட்டியின் நோக்கத்தைச் சரியாகப் புரிந்து கொண்டு மிக அதிகமான அம்சங்களை எழுதி வெற்றி பெற்ற சீதாவுக்கு வாழ்த்துக்கள்.

# மெட்ரோ ப்ரியா, குட்றோம், இந்தா!





* ஆங்! போதும் ரொம்ப அலட்டிக்க வேணாம்! கார்டு வாங்கிக் குடுத்தா நான் கூடத்தான் எழுதுவேன்!

'மெட்ரோ சானல்' நேயர்களுக்குப் ப்ரியாவைத் தெரியும். தெரியாதவர்கள் செவ்வாய்க் கிழமைகளில் எட்டு மணிக்கு டி.வி. முன்னாடி உட்கார்ந்து விடுங்கள். சகட்டுமேனிக்கு சினிமாக்காரர்களைக் கிண்டலடிக்கும் ப்ரியா இன்றைய தேதியில் டீவி சூப்பர் ஸ்டார்! 'தேனில் குளித்து, தென்றலில் தலை துவட்டி' வரும் ஆயிரக்கணக்கான அசட்டுக் கடிதங்களுக்குச் சொந்தக்காரர். சமையல், சங்கீதம், டான்ஸ் (ஐயோ, பாவம்!) சகலமும் தெரிந்த பி.ஏ. எகனாமிக்ஸ். ப்ரியா என்ன பிறத்தியாரைக் கிண்டல் அடிப்பது என்கிற 'தார்மீக எழுச்சியில்' விளைந்த நமது 'கமெண்டேட்டரின்' கமெண்ட்ஸ் இதோ! Yes, paying back in her own coin!



* வாரா வாரம்தான் கொலப்றீங்களே! இது வேற எதுக்கு, ஸ்பெஷலா?

* 'பல் செட்' இல்லேன்னு நம்பறோம்! அதுக்காக இப்படியா பயமுறுத்தறது?



* உங்க ப்ரோக்ராம், உங்களுக்கே இப்படீன்னா, எங்க நிலைமையைக் கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க!



* டீ.வி.க்கே இந்த குதி யலா? நாளைக்குத் தப்பித் தவறி சினிமா சான்ஸும் கிடைச்சுட்டா... ஹூம்! கடவுள்தான் காப்பாத்த ணும்...!



கமெண்ட்ஸ் : கிச்சா
படங்கள் : கோபிநாத்

# கிராக்கிப்படிக்கு ஆபத்து!

காப்பிக் கொட்டையின் விலை திடீரென்று கிலோவுக்குப் பதினைந்து ரூபாய் உயர்ந்தால் எந்தத் தமிழன் சகிப்பான்? அது மட்டுமா? பல்வேறு அத்யாவசியப் பண்டங்களின் விலைவாசிகளும் அவ்வப்போது உயர்ந்து கொண்டுதான் வருகின்றன. இந்த லட்சணத்தில் கிராக்கிப்படியை (D.A.) உறையச் செய்கிறேன் என்றால் யார்தான் சம்மதிக்க முடியும்? தேசிய அபிவிருத்திக் குழு கூட்டத்தில் இதற்குச் சம்மதம் அளித்து விட்டுப் பிறகு மக்களிடம் வாங்கிக் கட்டிக் கொள்ள எந்த முதல்வரும் தயாராக இல்லாததால் கையை விரித்து விட்டார்கள்.

கிராக்கிப்படி என்பது விலைவாசி உயர்வுப் புள்ளிக்கு ஏற்ப அதிகரிக்கத்தான் செய்யும்; குறையுமா என்ன! இதனால் பணப் புழக்கம் அதிகரித்து, மேலும் விலைகள் உயர்கின்றன என்பது ஓரளவு உண்மைதான். அரசுக்கும் நாளுக்கு நாள் கிராக்கிப்படி உயர்வினால் செலவு கூடிக் கொண்டேதான் போகிறது. எனவே கிராக்கிப்படியை ஓரிடத்தில் உறையச் செய்வது அல்லது கொடுக்காமலிருந்து ஓய்வு பெறும் போது சேர்த்துக் கொடுப்பது என்று பலவிதமான யோசனைகள் கூறப்படுகின்றன. போகாத ஊருக்கு வழி. கிராக்கிப்படி என்று ஒன்றை எப்போது கொடுத்து வர ஆரம்பித்தாயிற்றோ, அதை மாதச் சம்பளம் வாங்கும் மக்கள் எப்போது ஓர் உரிமையாகப் பெறவும் தொடங்கி விட்டார்களோ, இனி அதை ரத்து செய்வது அல்லது கட்டுப்படுத்துவது என்பதெல்லாம் பகற் கனவுதான். மாதச் சம்பளம் வாங்கும் அத்தனை அரசு ஊழியர்களும் இதர பல துறையில் உள்ள ஊழியர்களும் அத்தகைய முயற்சியை எதிர்த்துப் பொங்கி எழுவார்கள். எனவே, முதல்வர்கள் இதனை ஒருமுகமாக எதிர்த்ததிலும் வியப்பில்லை. ஆனால் ஒன்று; சிக்கன நடவடிக்கை தேவை என்ற ஓர் உணர்வு ஏற்பட்டு, அது பற்றி தேசிய அபிவிருத்திக் குழு விவாதித்திருப்பதே பெரிய முன்னேற்றம்தான். அந்த அளவில் பிரதமரும் நிதி அமைச்சரும் பாராட்டுக்குரியவர்கள்.

சிக்கன நடவடிக்கையை இவர்கள் அடிமட்டத்திலிருந்து தொடங்க எண்ணாமல் மேல் மட்டத்திலிருந்து ஆரம்பித்தால் மக்களும் பிரதமர், முதல்வர் மற்றும் மத்திய மாநில மந்திரிகள் காட்டும் முன்னுதாரணங்களைப் பின்பற்றி தாங்களும் சிக்கனமாக இருப்பார்கள். கூடுதல் கிராக்கிப்படி, போனஸ், லீவ் சாலரி என்றெல்லாம் கிடைக்கும் தொகைகளை வீண் செலவு








# கல்கி

1993
ஏப்ரல் 18
மலர் : 51
இதழ் : 38
ஸ்ரீமுக
சித்திரை 5



தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா.
–பாரதியார்.

செய்யாமல் சேமிக்கப் பழகுவார்கள். தேச பக்தியின் ஓர் அம்சமாகவே இதனை வலியுறுத்தவும் முடியும். தேசப் பொருளாதாரமும் சீர்ப்படும்.

ஆனால் நடப்பது என்ன? மத்திய அமைச்சர்கள் ஆளுக்கு ஒரு திக்கில் அயல்நாட்டு டூர் போகிறார்கள். பிரதமருக்கோ தனி விமானம் தவிர ஸ்பேர் விமானம் வேறு! காங்கிரஸ் மாநாட்டுக்கு என்ன செலவு! அல்வா கிளறவே ஆள்பலம் போதவில்லை என்று செய்தி! அப்புறம் நம்மூர் புரட்சித் தலைவியின் ஆயிரம் கார் பவனிகள் இருக்கவே இருக்கின்றன. தேர்தல் தேதி அறிவிக்கப்படுமுன் அவசர அவசரமாக தொகுதிக்குத் திட்டங்கள் அறிவிப்பு; இலவசங்கள் பரிசளிப்பு! நாளை இடிக்கப்படுவதற்கென்றே இன்று அவர் ஓய்வெடுக்க பல லட்சம் செலவில் மாளிகை! இந்த லட்சணத்தில் மத்திய அரசுக்குப் பொருளாதாரம் பற்றிய அறிவுரை வேறு! இவை எல்லாமாகச் சேர்ந்து மக்களிடம் செலவு செய்யும் மனப்பான்மையை வளர்க்குமா? சிக்கனத்தையா? காந்தி வாழ்ந்த நாட்டில் ஆடம்பரச் செலவுகளைக் குறைப்பது கஷ்டமானது அல்ல. தலைவர்கள் மனம் வைக்க வேண்டும் அவ்வளவுதான்.

சிதம்பரம் செய்தது போக மிச்ச சொச்சம் உள்ள கட்டுப்பாடுகளை நீக்க வேண்டும். தொழில் துறை சுதந்திரம் அடைய வேண்டும். மூலதனம் பெருக, பங்கு மார்க்கெட் சூடுபிடிக்க கொஞ்சம் வரிச் சலுகைகளை நிறுவனங்களுக்கு வழங்க வேண்டும். தானியங்கு இயந்திரங்கள் அன்றி மனித வளத்தைப் பயன்படுத்தும் நிறுவனங்களுக்குக் கூடுதல் சலுகை அறிவிக்கலாம். இவ்வாறெல்லாம் தனியார் துறையில் வேலை வாய்ப்புகள் பெருக வழி வகுத்து விட்டு, அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு அரசுப் பணிக்கு ஆள் எடுப்பதில்லை என்று சட்டமே இயற்றலாம். படிப்படியாக அரசுக்கு சம்பளப் பட்டுவாடா செலவு குறைந்து கொண்டே வரும். பொருளாதாரம் சீர்ப்படும். இப்படியெல்லாம் யோசிக்காமல் மாதச் சம்பளக்காரன் தலையில் கைவைத்தால் பஸ்மமாவது இந்த ஆட்சியாகத்தான் இருக்கும்!

ஜனநாயகத்தின் குரல்வளையை நெரிக்காதே!
இருநாள் உண்ணா விரதம்...
பெருந்தன்மை காட்டு!
ஆஹா, வடை ரொம்ப ருசி...
ஜிலேபி, சூப்பர்...
காங்கிரஸ் தலைவர்கள் எம்.எல்.ஏக்கள்.
உண்ணும் விரதம்!

# அகஸ்தியருக்கு வயது ஐம்பது!

"அகஸ்தியர்'' என்றதுமே இன்று பல மாணவர்களுக்கு குறுமுனி நினைவுக்கு வருகிறாரோ இல்லையோ, 'பாட நூல்களும் ''கைடு''களும் நினைவு வரும். அதிலும் ஹிந்தி பரீட்சை எழுதத் தீர்மானிக்கிறவருக்கும் ''அகஸ்தியர் கைடு'' இல்லாமல் முடியாது என்ற நிலை ஏற்பட்டு விட்டது! அண்மையில் பொன் விழாக் கண்டுள்ள இந்த நிறுவனத்தின் கதை ஆரம்பமாவது ஐம்பதாண்டுகளுக்கு முன் அல்ல; அதற்கும் பல வருஷங்களுக்கு முன் 1917-ல்! திருச்சி ஈ.ஆர். உயர்நிலைப் பள்ளியில் படிப்பதற்கு வந்த (கல்கி) கிருஷ்ணமூர்த்தி தமது சித்தி வீட்டில்தான் தங்கியிருந்தார். சித்தி மகன் சுப்பிரமணியத்திடம் (சுப்புணி) அளப்பரிய அன்பு. தமக்கு இருக்க இடமும் உணவும் அளித்த சித்தி - சித்தப்பாவுக்கு நன்றி தெரிவிக்கும் விதமாக சுப்புணிக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தார்.

பின்னாட்களில் சுப்பிரமணியம் திருச்சியில் ஒரு புத்தகக் கடை திறக்க எண்ணிய போது, நன்றி மறவாத ''கல்கி'' அதற்கு மூலதனம் கடனாகத் தந்து உதவினார். அவ்வப்போது கொள் முதலுக்கும் பண உதவி செய்தார். கல்கி அவர்களின் புனை பெயர்களுள் ஒன்று ''அகஸ்தியன்''. அந்தப் பெயரையே புத்தகக் கடையின் பெயராக ராஜாஜி தேர்ந்தெடுத்த போது, சுப்பிரமணியத்துக்கு ஆனந்தம் தாங்கவில்லை. அண்ணாவிடம் அத்தனை பாசம்!

கல்கி தமது மனைவியை ''ருக்மிணி'' என்று அழைக்கும் ஒவ்வொரு முறையும் ''அண்ணா!'' என்று அலறிக் கொண்டு ஓடி வருவார் சுப்புணி! பாசம் காரணமாக, 'ருக்மிணி' கூட 'சுப்புணி' என்றுதான் அவர் காதுகளுக்கு ஒலிக்கும்!

அந்த சுப்புணி, அகஸ்தியர் சுப்பிரமணியமாகப் பிரபலமடைந்து, படிப்படியாக வளர்ந்ததற்குப் பாதிக் காரணம் கருகருப்பான வியாபாரத்திறன்; மறு பாதிக் காரணம் சிக்கனம்! ஓரணா (ஆறு பைசா) சேமித்தால் மேலும் ஓரணா சம்பாதித்தது போல்தான் என்பார்! வளர்ச்சியின் வடிவங்களாக ஓர் அச்சகமும் பின்னர் பைண்டிங் நிறுவனமும் தொடங்கிய போது, அவற்றுக்கும் ''தேவி அச்சகம்'' என்றும் ''கர்நாடகா பைண்டிங் ஒர்க்ஸ்'' என்றும் அண்ணாவின் புனைபெயர்களையே சூட்டினார்!

"நோட்ஸ்'', ''கைடு'' என்பதெல்லாம் கல்கிக்குப் பிடிக்காதவை. 'அவை பரீட்சை தேறுவதையே குறிக்கோளாகக் கொண்டு, சிந்தனா சக்தியை மழுங்கச் செய்பவை; கல்வியின் நோக்கம் உருப் போட்டு பரீட்சை தேறுவதாக மட்டுமே இருக்கக் கூடாது' என்ற தமது கருத்தைப் பலமுறை தமது இந்தப் பத்திரிகையில் எழுதியும் இருக்கிறார். ஆனால் சுப்பிரமணியம் மாணவர்களுக்குப் பேருதவி புரிவதாகக் கருதி, ''அகஸ்தியர் நோட்ஸ்'' போட்டு, அதன் மூலமே முன்னுக்கு வந்தார். சகோதரர்களிடையே இருந்த கருத்து மாறுபாடு, அன்புக்கு இடையூறு செய்யவில்லை.

பொன் விழாப் பெருமை பெற்ற அகஸ்தியர் நிறுவனத்தின் வளர்ச்சியைக் காண இன்று சுப்பிரமணியம் இல்லை. அவரது மகன் கோபாலகிருஷ்ணன் சிறப்பாக நடத்தி வருகிறார். பாட நூல்கள் அரசுடைமையாக்கப்பட்ட பிறகும் கூடத் துணிவுடன் வித்தியாசமாகச் செயல்பட்டு வெற்றிகளைக் குவிக்கிறார். அதில் ஒன்றுதான் ஹிந்தி பரீட்சைகளுக்குக் கைடுகள். ஹிந்தி ஆட்சி மொழியாகத் திணிக்கப்படுவதை வேணுமானால் தமிழன் எதிர்ப்பானேயன்றி, ஹிந்தி மொழியை வெறுக்க மாட்டான் என்பதற்கு அகஸ்தியர் கைடுகளின் விற்பனை எண்ணிக்கையே சான்று.

பொன் விழாவையொட்டி அகஸ்தியர் நிறுவனம், புதிய, விசாலமான கட்டடத்துக்குக் குடிபெயர்ந்தது. புது இடத்தை மத்திய அமைச்சர் தங்கபாலு திறந்து வைக்க, மற்றொரு அமைச்சர் பலராம் ஜாக்கர் மலர்க் கிரீடம் அணிந்து வாழ்த்தினார். நாமும் வாழ்த்துவோம்; அகஸ்தியர் நிறுவனத்தை மட்டுமல்ல; அதன் பொன் விழாவில் இரு மத்திய மந்திரிகள் பங்கேற்ற முகூர்த்தம், மத்திய மந்திரி சபையும் ஆட்டம் காணாமல் நிலைத்திருந்து நல்லாட்சி வழங்க வாழ்த்துவோம்!

- கி. ரா.



● ஜாக்கர், தங்கபாலுவுடன் கோபாலகிருஷ்ணன்





உறுப்பினர்களுக்கு எமது உளங்கனிந்த
தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்!

## PENSIONERS PET DEPOSIT SCHEME

| Period | 1 year | 2 years | 3 years |
|---|---|---|---|
| Interest | 20% | 20.5% | 21% |

**Minimum Deposit Amount Rs. 12,500/-**

## SAVINGS DEPOSIT SCHEME

**Highest ever 12 % interest**

Interest calculated for the minimum balance maintained between 6th & 25th, and credited once in six months. Account can be operated between 9.00 a.m. to 5.30 p.m.

## FIXED DEPOSIT SCHEME

| Period | 12 Months | 24 Months | 36 Months | 48 Months | 60 Months |
|---|---|---|---|---|---|
| Rate of Interest p.a | 17.5 % | 18 % | 19 % | 19.5% | 20 % |

## DOUBLE BENEFIT DEPOSIT SCHEME

**MONEY DOUBLES IN JUST 42 MONTHS**

## NATRAJ BOND

Avail interest plus attractive bonus

**21%**

Minimum Amount: **Rs. 50,000/-** Period: **60 Months**

**We offer gold jewel loans**

(Interest will be calculated on actual-day basis)

**We also offer mortgage loans against completed flats and other properties.**



# ALWARPET BENEFIT FUND LIMITED

**Alwarpet:** H.O: 43-B, C.P. Ramaswamy Road, *(Opp. State Bank of Mysore)*, Madras – 600 018.
**Besant Nagar:** 8 A, I Floor, N.D.P. Complex, *(Opp. fish market)*, Madras – 600 090.
**Nanganallur:** 19, 4th Main Road, *(6th Main Road Corner)*, Madras – 600 061.
**Ashok Nagar:** 13-E, 10th Avenue, Pillar Apartments, Madras – 600 083.

**Transaction with members only.**

## வட்டமேஜை

◆ 'ஏப்ரல் முட்டாள்கள்' கார்டூன்கள் சிந்தனைக்குரிய நகைச்சுவை லயிப்பு. கடைசி கார்டூன், ''ஏமாற்றுபவர்கள்தான் மாறுகிறார்கள்; ஏமாறுபவர்கள் மாறுவதில்லை'' என்கிற கவியரசு கண்ணதாசனின் கூற்றினை நினைவுபடுத்துவது போல் இருக்கிறது.

மதுரை - 14, ஆர். பழநி.

◆ ''அர்ஜுன் சிங்கை அலட்சியம் செய்யாதீர்கள்'' என்ற தங்களின் ஆக்கபூர்வமான தலையங்கத்தை பிரதமர் அலட்சியம் செய்யாமல், செயல்பட்டால் சிக்கல்கள் தவிடு பொடியாவது, நிச்சயம்!

கவுந்தப்பாடி, த. குணசேகரன்.

◆ தலையங்கம் ஆணியடித்தாற்போல் வரையப்பட்டிருக்கிறது. காந்தீயத்திற்கும் அத்வானியியத்திற்கும் இடையே ஏற்படும் சிக்கலுக்கான முடிவை எடுக்கத் தாங்கள் காங்கிரசைத் தயார் படுத்திக் கொள்ளச் சொன்ன யோசனை முதல்தரம்!

பேரளம், ஆர். பழம்.

◆ அட்டைப் படத்தின் அழகே ''சிப்ஸ்'' மீது தீராத ஆசையை ஏற்படச் செய்து விட்டது!

மதுரை - 10, பி. ராஜசேகரன்.

◆ அரசாங்க வேலையை மட்டுமே நம்பி அரட்டை அடித்துப் பொழுதைப் போக்கும் இளைஞர்களுக்கு, குவாலிட்டியுடன் சிப்ஸ் தயாரித்தால் நல்ல லாபம் கிடைக்கும், என்று கடச் கடச் சுயதொழில் தொடங்க அறிவுரை வழங்கியது அட்டைப்படக் கட்டுரை. பாராட்டுக்கள்!

கொளப்பாடு, ப. வெங்கடேசன்.

◆ ''வாழ்க்கையில் திருமணம் என்பது சில கட்டுப்பாடுகளை விதிக்கிறது; அதுதான் இல்வாழ்க்கை'' என்பதை, மிக அருமையாக எடுத்துக் காட்டியுள்ளார் 'கவர்' சிறுகதை ஆசிரியர்.

வயலோகம், எஸ். குருசேகர்.

◆ T.V மர்சனத்தை அதன் (T.V) பாணியிலேயே செய்திருப்பது நல்ல 'டெக்னிக்!'' நல்ல நகைச்சுவையாகவும் இருந்தது.

முத்துப்பேட்டை, மிஸ்டர் தஞ்சை.

◆ ''புரியாமை'' கதை அற்புதம். ''வாழ்க்கையின் அழகே புரியாமைதான்'' என் பதை எளிய சம்ப வத்தின் மூலம் அழகாய் விளக்கியிருக்கிறார் கதாசிரியர்.

ஆவடி, உமா சௌந்தரி.




◆ கவிஞன் ஆன ஆபீஸ் பையனின் கைகளுக்கு ஒரு தங்கக் காப்பே போட வேண்டும். கச்சா முச்சா கவிதையல்ல அது. சிந்தனையைத் தூண்டும் அர்த்தமுள்ள கவிதைகள்.

திருச்சி - 17, தென்னூர் எம். யாதவன்.

◆ குறித்த நேரத்தில் ஆரம்பித்த அரசியல் கூட்டம், பி.ஜே.பி மீட்டிங் எனப் போட்டுவிட்டு அத்வானி காலதாமதமாய் வந்ததையும் போட்டு உள்ளீரே. அவரும் ஓர் அரசியல்வாதி என்பதை உணர்த்தவா?

மதுரை - 20, சி. மகேஷ்.

◆ 'கண்ணைக் கசக்கிக் கொள்ள வேண்டாம்' என்று 4.4.93 இதழ் 30 - ம் பக்கத்தில் வந்த துணுக்கைப் பார்த்தேன். மீண்டும் கண்ணைக் கசக்கிக் கொண்டும் பார்த்தேன். அதில் தகவல் தந்தவர் என்ற முறையில் என் பெயர் விட்டுப் போயிருக்கிறது.

சென்னை - 92, கிருஷ்ண ராஜ்கோபால்.

◆ எய்ட்ஸ் பற்றிய கட்டுரை, மனத்தின் அநாவசியமான பயத்தையும், குழப்பத்தையும் நீக்கி, மனத்திற்குத் தெளிவை உண்டு பண்ணியது.

திருச்சி - 8, உ.ர. சங்கர்.

## சுயதொழிலுக்குச் சுடச் சுட யோசனை!

நில், கவனி, வெற்றிகொள்!

# சாம்பலைச் சாதனையாக்கிய சிந்தாமணி!















**உண்மைக் கதை : ஸ்ரீதர்    படம் : கரோ**






























**அடுத்த வாரம் : ஒரு டென்னிஸ் வீரனின் வெற்றிக் கதை**

●● தலைவனின் தொண்டில் திருப்தி இல்லாத போது, அவனைப் பதவியிலிருந்து இறக்க, அனைவரும் ஒன்றுகூடி, ஒரு தட்டு நிறையப் பக்குவம் செய்த பச்சைக் கிளியின் முட்டைகளைக் காலை உணவாக, அவன் முன் வைப்பார்கள். தன்னை அவர்களுக்குப் பிடிக்கவில்லை என்பதை அவன் புரிந்து கொள்வான். உடனே பதவி விலகி விடுவான்! இது, நைஜீரியாவின் 'ஒய்லோ' பழங்குடியினர் கடைப்பிடிக்கும் பழக்கம்!

இங்கு...? அத்தனை முட்டைகளையும் தின்று ஏப்பம் விட்டு விட்டு ''இன்னும் கொண்டா'' என்று கேட்க மாட்டார்களோ நம் தலைவர்கள்!

●● ஆப்பிரிக்காவின் 'ஜுலு' இனத்துத் தாய்மார்கள், தமக்கு ஒரு குறிப்பிட்ட வயது கடந்ததும், தாமே இசைந்து தம் கணவனை இரண்டாம் திருமணம் செய்து கொள்ளுமாறு



வற்புறுத்துகிறார்கள். சிலர் அதற்காக நிறையச் செலவு செய்யவும் தயாராக உள்ளனர். காரணம், உடல்வலு தளர்ந்து விட்ட தனக்குக் குடும்பக் காரியங்களில் உதவி செய்ய ஒரு நபர் - அதிலும் ஒரு இளம்பெண்மணி கிடைக்கிறாளே என்பதுதான்!

''என் மனைவி இதையெல்லாம் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறாளே சார்!'' என்று அங்கலாய்க்கிறார் இங்கே சின்ன வீட்டுக்காகச் செலவு செய்து நொந்து போன நபர்!

●● பண்டைய ஸ்பார்ட்டாவில் திருமண வயதை அடைந்த

சுதந்திரம் வருகிறது...!
ஓடு... ஓடு...
ஒளிந்து கொள்...!

பிரும்மச்சாரியைச் சிறையில் அடைத்து வைத்திருப்பார். திருமணத்தன்று தான் விடுதலை. அங்கு இன்னொரு வழக்கம். மூன்று குழந்தைகள் பெற்று விட்ட ஆணுக்கு ராணுவ சேவையிலிருந்து விடுதலை. அதுவே நான்கானால், எந்தவித வரியும் செலுத்த வேண்டாம்!'' இதோ நான் போகிறேன் ஸ்பார்ட்டாவுக்கு'' என்று கிளம்பி விடாதீர்கள். அது சரித்திர புத்தகத்தில் மட்டும்தான் இன்று உள்ளது.

●● தென்னாப்பிரிக்காவின் 'யலோமாமோ' என்ற இனத்தின்




பெண்கள், கணவரிடம் தாம் பெறும் அடி உதைகளின் எண்ணிக்கையை வைத்து, அவன் தம்மிடம் காட்டும் அன்பின் ஆழத்தைக் கணக்கிடுகின்றனர். அதிக அடி, உதை, அதிக அன்பு... காதல்! தைரியம் உள்ளவர்கள், இங்கு தம் மனைவியிடம் இந்தச் செய்தியைச் சொல்லிப் பார்க்கலாமே!

●● பாபுவா நியூ கினியின் மக்களுக்குச் சுதந்திரம் வந்த சமயம், அவர்களுக்கு விடுதலை என்றால் என்ன என்றே தெரியாது. சில உள்ளடங்கிய கிராமத்தவர்களிடம் போய், ''சுதந்திரம் வருகிறது! சுதந்திரம் வருகிறது!'' என்றார் ஒருவர் பரபரப்புடன். உடனே அந்தக் கிராம மக்கள், ''ஓடு... ஓடு... எங்கேயாவது போய் ஒளிந்து கொள்'' என்றவாறு தலைதெறிக்க ஓடி ஒளிந்து கொண்டனர்!

- ஜய்ராம்ஜி

3

"துர்காவுக்கும் விகவத்துக்கும் இருப் பதியில் வெச்சா கல்யாணம்னு சொன்னே?" பிரசன்னா கோப்பையிலிருந்த சூடான காப் பியை உறிஞ்சியவாறு கேட்டான்.

"ஆமாம். ஆனால் விகவத்தைப் பொறுத்தவரையில் இது கல்யாணம் இல்லை - இது ஒரு 'ஸ்டிராட்டெஜெம்!" நித்யா சிரித்துக் கொண்டே கூறினாள்.

"ஏன் அப்படிச் சொல்றே?"

"பின்னே? இதுக்கு என்ன பெயர் சொல்ல, பிரசன்னா? இவன் என்னுடன் கல்லூரி நாட்களில் பழகின விகவம் இல்லை - ரொம்பவும் மாறிப் போயிருக்கான். மேல்நாட்டுப் பழக்க வழக்கங்கள், பணம், அந்தஸ்து - இவை எல்லாம் ஒரு பக்கம். இத்தனை நாட்கள் அம்மாவுக்குப் பயந்து பயந் துண்டு இருந்தப்புறம் இப்ப திடீரென்று கிடைச்ச சுதந்திரம் அவனை ரொம்பவும் மாற்றியிருக்கு. ஏதோ வசனம் சொல்லு வாளே... ஆங்!! அற்பனுக்கு ஐசுவரியம் வந்தா அர்த்த ராத்திரியிலயும் குடை பிடிப்பானாம்."

கோப்பையைக் கீழே வைத்த பிரசன்னா எழுந்து போய் வாட்டர் கூலரிலிருந்து ஒரு வாய் தண்ணீர் குடித்தான்.

"உனக்கு வேணுமா நித்யா?"

"நோ தேங்க்ஸ்."

மீண்டும் தனது இருக்கையில் வந்தமர்ந்தவன், நித்யா வை கேலியாகப் பார்த்தான்.

"நீ போய் இவனைக் கல்யாணம் பண்ணிக்க விரும்பி னேங்கிறதை நம்பவே முடியலை நித்யா!"

"ஓ! இனிமே இப்படியெல்லாம் பேசாதே பிரசன்னா. அவன் மேலே நான் நிஜமாகவே பிரியம் வெச்சிருந்தேன்னா எப்பாடுபட்டாவது அவனை அடைஞ்சிருப்பேன். அந்தக் கல்லூரியின் ரம்யமான சூழ்நிலை, சுற்றுப்புறம், கவலை யில்லாத இளமைக் காலம், தோள்களின் மீது ஒருவிதமான சுமையோ, பொறுப்போ இல்லாத நிலை - இதோடு அவனது அறிவாற்றல், பேச்சுத் திறமை, அணுகுமுறை, பழகறதுல ஒருவித பவ்யமான பண்பு - எல்லாமா அவனை ஒருவித 'ஐடியல்' மனுஷனாகக் காண்பிச்சது. வெல்... அதுவும் ஒரு மாதிரியான இன்ஃபேச்சுவேஷன்னு வெச்சுக்கோயேன்."

"உன்னை நம்பறேன் நித்யா. ஏன்னா, வேறு மாதிரியா இருந்ததானா நீ உடைந்து போயிருப்பே!"

அவள் மௌனமாக அமர்ந்திருந்தாள். விகவத்தின் கோழைத்தனம் இவளுள் மறைந்து கிடந்திருந்த மனமுதிர்ச் சியை வெளிக்கொண்டு வருவதற்குத் துணையாக இருந்தி ருக்க வேண்டும். சில நேரங்களில் பிறருடைய குறைபாடு களின் மூலம் நமது சுயதரிசனம் ஏற்பட வாய்ப்பிருக்கிறது.

தொலைபேசி ஒலித்தது. பிரசன்னா ரிஸீவரைக் கையில் எடுத்தான்.

"யெஸ்... பிரசன்னாதான். ஆமாம்... அப்படியா? வெரி குட்! ஆறு மணிக்கா? சரி வர்றேன்..."

நித்யாவைப் பார்த்தான்.

"நித்யா - இலக்கிய வட்டத்திலேருந்து ஃபோன். அடுத்த வெள்ளிக் கிழமை ஹரிகுமாரை கௌரவிக்க ஒரு கூட்டம். என்னைப் பேசச் சொல்லிக் கூப்பிட்டிருக்காங்க. நீயும் வர்றியா, நித்யா? மனோன் மணி கல்யாண மண்டபத் துலதான்."

"வர்றேன் பிரசன்னா. ஆமாம், உன்னோட புதிய நாவல் எ ன் ன ா ச் சு? எப்போ மு டி க் க ப் போறே?"

"ஏழு அத்தியாயங்

# பனிப்பாறை

களிலே நிற்கிறது நித்யா.''

''முடிக்க வேண்டியது தானே பிரசன்னா! இது என்ன வனவாசம்...! ஓ.கே.. நான் புறப்படறேன்... சே...! வீட்டுக்குப் போகணும்னாலே வெறுப்பா இருக்கு பிரசன்னா.''

''அப்போ என் கூட வாயேன் நித்யா. ஹோட்டல் ரிமோனோ அனெக்ஸ்ல புத்தகக் கண்காட்சி நடந்திண்டிருக்கு. நான் அங்கே போகலாம்னுதான் நெனைச்சிண்டிருக்கேன். நீயும் வாயேன். எட்டே காலுக்கு உன்னை உன் வீட்டுல இறக்கி விடறேன்.''

இருவருமாகப் படியிறங்கினார்கள்.

''ஆட்டோல போலாமா?'' பிரசன்னா கேட்டான்.

''ம்...''

ஆட்டோ அடையாறு மேம்பாலத்தைத் தாண்டி மயிலையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

''இப்போ என்ன பண்ணறதா உத்தேசம் நித்யா? அந்த ரெண்டு பெரிய காண்டிராக்டுகளையும் அவன் பிடுங்கிட்டதாகச் சொன்னே, இல்லை?''



திடீரென்று அவள் முகம் மலர்ந்து போனது.

''ஒரு வெல்லக்கட்டி வந்து மடியில விழுந்திருக்கு பிரசன்னா.''

அவளே சொல்லட்டும் என்று அவன் மௌனமாக இருந்தான்.

''எல்.ஆர்.பி - பிரதர்ஸ் இல்லை? அவங்களுக்கு ஒரு ஷாப்பிங் சென்டர் கட்டித் தரணுமாம். அந்த பிரதர்ஸோட தங்கை ஜென்னிஃபர் என்னோட ரொம்ப நெருக்கமான தோழி. ப்ளஸ் டூ வரையில் ஒண்ணாகவே படிச்சோம். அப்புறம் அவ பி.எஸ்.ஸி முடிச்சிட்டு ஒரு டாக்டரை 'லவ்' பண்ணிக் கல்யாணம் செஞ்சிண்டா. இங்கே சாந்தோம்லதான் அவ வீடு. நாளைக்கு மிஸ்டர் கினியோ - அவளோட அண்ணன் - வந்து என்னை பிக்கப் பண்ணிண்டு அவங்க தேர்ந்தெடுத்திருக்கிற இடத்திற்குக் கூட்டிக் கொண்டு போகிறேன் என்று கூறியிருக்கிறார். ஸ்மிதுக்கும் ஒரே குஷி பிரசன்னா!''

''விகவம் இதுலயும் குறுக்கிடாம இருக்கணும்.''

''அந்தக் கவலையே வேண்டாம் பிரசன்னா. ஜென்னிஃபர் அவனை உள்ளே நுழைய விட மாட்டா. அவளுக்கும் அவனைப் பற்றின எல்லா விஷயங்களும் தெரியும்.''

ஓட்டல் ரிமோனாவின் முன் ஆட்டோ நின்றது. இருவரும் இணைந்து உள்ளே போனார்கள். எட்டு மணிவாக்கில் இருவரும் வெளியே வந்ததும் இருவரின் கைகளிலும் புத்தகக் கட்டுகள் இருந்தன.

''அப்போ நான் கிளம்பறேன் பிரசன்னா. அடுத்த ஞாயிற்றுக் கிழமை சந்திக்கலாம். அதுவரையிலும் நான் பிஸி.''

''இந்தா நித்யா'' - அவன் ஒரு புத்தகத்தை அவளிடம் நீட்டினான்.

''என்ன இது?''

''நான் உனக்கு முதன் முதலாகக் கொடுக்கிற பரிசுன்னு வெச்சுக்கோயேன். இந்த ஆழமான நட்பு தந்த உரிமையில் நான் உனக்கு இதைக் கொடுக்கிறேன்.''

வீட்டின் முன் அறையில் பாயைப் போட்டுப் புடைவைகளைப் பரத்தியிருந்தார்கள் துர்காவும் பார்வதியும்.

''வா நித்யா. கைக்கால் அலம்பிண்டு வந்து புடைவைகளைப் பாரு. அப்புறம் தட்டு வைக்கிறேன்.''

தங்கையின் சிரிப்பும், தாயின் மலர்ந்த முகமும் அவளுக்கு மேலோட்டமாக மகிழ்ச்சியைத் தந்தாலும், இந்தப் பெண்ணின் வாழ்க்கை நல்லபடியாக அமைய வேண்டுமே என்ற எண்ணமும் ஏற்பட்டது.

# பாப்கார்ன் கனவுகள்: “ஜில்பாஸ்!”

◆ திறமையை மட்டும் வைத்துக் கொண்டு, லட்சியத்தை வெறியோடு முயன்றாலும், ரேஷன் கடை வரிசை மாதிரி நிற்கத்தான் வேண்டும். குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கும் அதிர்ஷ்டமாய் என்றாவது நீ ஜெயிக்கலாம். ஆனால், இதையும் மீறி சற்றும் தளராத விக்ரமாதித்தன் மாதிரி லட்சுமிநாராயணன் மீண்டும் வரப் போவது தான் இந்த கதை தரும் சக்திமிக்க டானிக்! என்னவொரு நம்பிக்கை! நெருப்பில் சாம்பலாகி மீண்டும் உயிர்ப்பிக்கும் பீனிக்ஸ் பறவையாய்! லட்சுமிநாராயணனின் திறமை மீண்டும் ஜெயிக்கும். அவன் ஜெயித்தால் ஒழிய எந்தவொரு நம்பிக்கைக்கும் அர்த்தம் இருக்காது.

பொள்ளாச்சி - 3, மீரா.



◆ "தமிழனோட கதை எப்படி?"
"பாப்கார்ன் கனவுகள்தானே?"
"ஆமாம்."
"ஜில்பாஸ்!"

தஞ்சாவூர், வெ. முருகானந்தம்.



◆ பாப்கார்ன் கனவு கலை எங்கள் மனதில் என்றும் நிற்கும் கனவு களாக்கி விட்டார் ம. வே. சிவகுமார். விஜயலக்ஷ்மியின் பாத்திரப் படைப்பு படுருப்பார். கதைக்கு உயிரூட்டுவது போல இருந்தன ஜெ. வின் ஓவியங்கள்.

ஸ்ரீவைகுண்டம், எ. கிருஷ்ணவேணி.

◆ "லக்ஷ்மிநாராயணன்" எங்கள் இதயத்தில் நீங்கா இடம் பெற்று விட்டான். விஜயலக்ஷ்மி போல் வாழ்க்கைத் துணைவி கிடைத்தால் வாழ்வே சொர்க்கம்தான். செயற்கைப் பூச்சு ஏதுமின்றிப் "பாப்கார்ன் கனவுகளைப்" படைத்திட்ட ம.வே. சிவகுமார் எழுத்துலகின் இமயத்தைத் தொட வாழ்த்துக்கள்.

திருத்துறைப்பூண்டி, வி. என். ஜீவா.

◆ இயல்பான நடை, யதார்த்தமான முடிவு. நாம் வாழ்வில் தினம் பார்க்கும் கேரக்டர்கள். இந்தக் கனவுகள் நம் முன்னே எங்காவது யாராலாவது காணப்பட்டுக் கொண்டுதான் இருக்கும்.

சென்னை - 17, திருமதி எஸ். ஜீஜாபாய்.

◆ பாப்கார்ன் கனவுகள்" யதார்த்தமான நடையுடன், கவையாக இருந்தது. சற்று சினிமாத்தனத்துடன் இருந்தது மட்டும்தான் குறை.

பெங்களூர், என். கே. சகவரி.

◆ தமிழனை இப்படி கவுத்திட்டீங்களே சிவகுமார் சார். ரொம்ப அநியாயம்!

புதுக்கிராமம், கு. அ. ஈசாக் சுந்தரம்.

துர்கா, விசுவம் இருவருமே சுயநலக் காரர்கள். சுயநலம் இருக்குமிடத்தில் அன்பு இருக்குமா?

"இது அத்தைக்கு. இது பெரிய மன்னிக்கு. இது சாவாட்சிக்கு. ஏன் நித்யா? இந்த ஆறு புடைவைகளும் துர்காவுக்கு. நன்னாயில்லை?"

"நன்னாயிருக்கு அம்மா" என்றாள் நித்யா.

"இதப் பாரு அக்கா - இந்தக் கத்திரிப் பூக்கலர் புடைவை அம்மாவோடது. இதோ... இந்த சந்தனக் கலர் பெனாரஸ் உனக்கு."

"என்ன துர்கா இது? நான்தான் பட்டு கட்டிக்க மாட்டேன்னு உனக்குத் தெரியுமே! இதையும் நீயே வெச்சுக்கோ. எனக்கு உன் செலக்ஷனிலேயே ஒரு விமல் பாலியெஸ்டர் எடுத்துக் கொடுத்துடேன்."

இரவுச் சாப்பாட்டு வேளையில் பஸ் ஏற்பாடு செய்து விட்டதாகக் கூறினான் ராமன். நித்யா மௌனமாகச் சாப்பிட்டாள். உடல் லேசாக வலித்தது. வாசல் அறையில் துர்காவும் ராமனும் பேசிக் கொண்டிருந்தார்கள். இவள் படுக்கை அறைக்குச் சென்று விளக்கை அணைத்து விட்டுப் படுத்துக் கொண்டாள்.

வாழ்க்கை ஒரு பெரிய மலை போல் தோன்றியது. எத்தனை முட்டுக் கட்டைகள்! விசுவம் அவளது வாழ்க்கையில் மீண்டும் குறுக்கிட மாட்டான் என்று என்ன நிச்சயம்? மூர்க்கனாக இருப்பவன் எளிதில் மாறி விடுவானா? மனசு ஒரே ஒருகணம் நடுங்கியது. கண்களை மூடிக் கொண்டு தூங்க முயற்சி செய்கையில் பிரசன்னா கொடுத்த புத்தகத்தின் நினைவு வந்தது. போர்வையை உதறி விட்டு எழுந்தவள், டேபிள் மீது இருந்த விளக்கின் ஸ்விட்சைத் தட்டினாள். இளம் பர்சை வண்ண பிளாஸ்டிக் உறையிலிருந்த பின்னை அப்புறப்படுத்தி விட்டு புத்தகத்தை வெளியே எடுத்தாள். அயன் ராண்ட் எழுதிய 'அட்லஸ் ஷிரக்டு.'

ஒருவித எதிர்பார்ப்புடன் படிக்க உட்கார்ந்தவள், இரவு இரண்டு மணி வரையில் எடுத்த புத்தகத்தைக் கீழே வைக்க மனமில்லாமல் படித்தாள்.

(தொடரும்)



# பங்களா தேஷில் பெண் உரிமைக்குரல்

**ப**ங்களாதேஷின் பெண் எழுத்தாள ரான தஸ்லீமா நஸ்ரீன் பங்களாதேஷ் பத்திரிகைகளில் பெண்ணுரிமை பற்றிக் காரசாரமாகக் கட்டுரைகள் எழுதி வருகிறார். இவருடைய கட்டுரைகள் தீவிர மதவாதிகளின் கடுமையான எதிர்ப்புக்குள்ளாகியுள்ளன. வெறியர்கள் இவரைத் தாக்கியுமிருக்கிறார்கள். இதற்கெல்லாம் அஞ்சாத நஸ்ரீன், தம் கட்டுரைகளின் தொகுப்பொன்றைக் கல்கத்தா புத்தக நிறுவனமொன்றின் மூலம் வெளியிட்டிருக்கிறார். 'நிர்பாசித கலம்' (தேர்ந்தெடுக்கப்பட்ட பத்தி) என்ற தலைப்பில் வெளியான இத்தொகுப்புக்கு அந்த நிறுவனத்தின் பரிசும் கிடைத்திருப்பது வெறியர்களின் கோபத்தை இன்னும் கிளப்பிவிட்டுள்ளது. கடந்த ஒன்பது மாதங்களில் இந்தப் புத்தகத்தின் ஆறு பதிப்புகள் (மொத்தம் 30,000 பிரதிகள்) அச்சிடப்பட்டுள்ளன.

டாக்கா அரசாங்க மருத்துவமனையில் மருத்துவராகப் பணிபுரிந்துவந்த நஸ்ரீனின் கருத்துக்கள் பங்களாதேஷ் அரசாங்கத்துக்கும் கோபமூட்டியுள்ளன. ஜனவரி மாதம் அவர் கல்கத்தா புத்தக விழாவில் கலந்து கொள்ள வரமுயன்ற போது டாக்கா விமான நிலையத்தில் ஏதோ காரணங் காட்டித் தடுக்கப்பட்டார். இப்போது அவர் அரசாங்க வேலையை ராஜிநாமா செய்துவிட்டுத் தனிப்பட்ட முறையில் மருத்துவத் தொழில் செய்கிறார்.


• சி. ஆர். ரவீந்திரன்

## பத்மா நதிப் படகோட்டி!

**ப**ங்களாதேஷில் ஓடும் கங்கைக்குப் பத்மா என்று பெயர். புகழ்பெற்ற வங்காளி எழுத்தாளர் மாணிக் பந்த்யோபாத்யாய் பத்மா நதிக்கரையில் வாழும் படகோட்டிகள், மீனவர்களைப் பற்றி எழுதிய சிறந்த நாவல் 'பத்மா நதீர் மாஜி' (பத்மா நதிப் படகோட்டி).

மேற்கு வங்கத்திலும் பங்களாதேஷிலும் உள்ள படத் தயாரிப்பாளர்களும் கலைஞர்களும் ஒன்று சேர்ந்து 'பத்மா நதீர் மாஜி' நாவலைத் திரைப்படமாக்கியுள்ளனர். கௌதம் கோஷால் இயக்கப்பட்டுள்ள இந்தத் திரைப்படம் பங்களாதேஷில் ரசிகர்களின் அமோகமான பாராட்டைப் பெற்றுள்ளது. இந்தியாவுக்கும் பங்களாதேஷுக்குமிடையே பல பிரச்னைகளிருந்தாலும் மேற்கு வங்கத்துடன் பங்களாதேஷின் கலாசார உறவுகள் தொடர்கின்றன என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

## தமிழ் எழுத்தாளருக்கு விருது

**த**மிழ் எழுத்தாளர் சி. ஆர். ரவீந்திரன் தமது 'ஈரம் கசிந்த நிலம்' நாவலுக்காகக் கல்கத்தா பாரதீய பாஷா பரிஷத்தின் 'கரேகா' பரிசைப் பெற்றுள்ளார். பரிசளிப்பு விழா சென்ற மாதம் நடைபெற்றது. இதையொட்டி தமிழ்நாட்டிலிருந்து வந்திருந்த சில எழுத்தாளர்கள், பதிப்பாளர்களுக்குக் கல்கத்தா தமிழ் மன்றமும், பாரதி தமிழ்ச் சங்கமும் வரவேற்பு அளித்தன.

கொங்கு வட்டாரத் தமிழில் சுவையாக எழுதப்பட்டுள்ள 'ஈரம் கசிந்த நிலம்' மண்ணின் மைந்தர்களின் அடிப்படைப் பிரச்னைகளை அழுத்தமாகச் சொல்கிறது.

– சு. கிருஷ்ணமூர்த்தி

# வானமே எல்லை

- எதைச் செய்தாலும்
வெறுப்புத்தானே
மிஞ்சுகிறது?
விடு கவலையை.
வெறுப்பதையே
ஒருநாள் வெறுத்து விடு.
விருப்பங்கள் தானாய்
நிறைவேறும்.

- இளைஞனே!
உன்னிடம்
சோகச் சுமைகள்
இருப்பதாய்
வருத்தப்படாதே!
வாழ்க்கைப் பாதையில்
அவையெல்லாம்
அனுபவப் பொக்கிஷங்கள்

- சோகம், துக்கம்
துன்பமெல்லாம்
உன் மீதுள்ள
மணல் மூட்டைகளல்ல;
உப்பு மூட்டைகள்.
முயற்சியெனும்
மழையால் ஒருநாள்
கரையத்தான் போகிறது.

- உனது சிறகுகள்
வெட்டப் படவில்லை;
நீயே
மடக்கி வைத்திருக்கிறாய்.
உன்னைக்
கூண்டிலிடவில்லை;
நீயே
முடங்கிக் கிடக்கின்றாய்.
வானத்தில்
எல்லையற்று
நீ பறக்கலாம்,
புது உலகம் காணலாம் -
தன்னம்பிக்கை மட்டும்
இருந்தால்.

- போட்டிகளால்
துவண்டு போகின்றாயா?
வாழ்வில்
போட்டி என்பது உணவில்
உப்பு போல
உப்பின்றி உணவேது?

- பொறாமை கலக்காது,
மனம் தளராது
போட்டியில்
கலந்து கொள்
வெற்றி உனக்குத்தான்!

- ந. ச. நடராசன்



# வசீகரன்

சத்தியப்ரியன்

கூடத்தில் வரிசையாக நான்கு நாற்காலிகள் போட்டிருந்தார்கள். ஓரமாக ஒரு பட்டுப் பாய் விரித்திருந்தார்கள். டீபாய் வைத்து மேலே தாம்பாளத்தில் வெற்றிலை, பாக்கு, இரண்டு டஜன் வாழைப் பழம், பெரியதாய் நான்கு ஆப்பிள், வழிந்து நிரம்பிய பூப்பந்து. அலைந்து கொண்டிருந்தவர்களில் ரேணுகாவின் இரண்டு அக்காக்களையும், அண்ணன் ரகுவையும் அடையாளம் கண்டுகொள்ள முடிந்தது.

இவர்கள் எல்லாரையும் பார்த்து சரியாக ஆறு வருஷமாகிறது. பெரிய அக்கா புவனத்தை இப்பொழுது நான் இருக்கும் ஊரில் கட்டிக் கொடுத்திருப்பதால் எப்பொழுதோ இரண்டு முறை பொது இடங்களில் பார்த்ததுடன் சரி. ரேணுகா விஷயத்தில் நான் சம்மதம் தெரிவிக்காததால் மிகவும் வருத்தப்பட்டவர்களில் புவனமும் ஒருத்தி. இருந்தாலும் இந்த ஆறு வருஷத்தில் ரேணுகாவைப் பற்றிய ஓரளவு செய்திகள் எனக்கு புவனம் மூலம்தான் கிடைத்தன.

புவனம் என் முன்னால் காப்பி தம்ளரை வைத்தாள்.

''ரேணுகா இல்லியா?'' என் கேள்வியும் புவனம் பின்னாலேயே போய் விட்டது. காப்பியில் ரேணுகா தெரிந்தாள். இவ்வளவு திட்டமான காப்பியை என் தாயாரும் போட்டதில்லை. நான்கு வருடங்களாக என்னுடன் குடித்தனம் நடத்தும் என் மனைவியும் போட்டதில்லை. காப்பி என்றில்லை, கதவு நாதங்கியைத் திறப்பதில் கூட ரேணுகாவிடம் ஒரு நேர்த்தி இருக்கும். பூ வேலைப்பாட்டுடன் கூடிய தையல் தெரியும். வாரம் ஒரு திரைச்சீலை செய்து அழகு பார்ப்பாள். சொன்னதற்கு ஏற்றாற்போல் வளையும் ஓவியக் கோடுகள் அவளுக்கு வரும். யானையும், மானும், நாயும் சுவரில் நிஜமாகப் பேசும். பாட்டு கற்றுக் கொண்டிருக்கிறாள். என் முதல் சிறுகதையின் நகலை அவள்தான் எழுதிப் பத்திரிகைக்கு அனுப்பினாள்.

அப்படிப்பட்ட ரேணுகாவிடம், ''நீ ஒரு சிநேகிதம்தான் ரேணுகா. அதற்கு மேல் என்னால் சிந்திக்க முடியவில்லை. இயல்பாகவே ஓர் ஆரோக்யமான ஆண் என்பதால் ஒரு பெண்பால் ஏற்படும் ஈர்ப்பு மட்டும் தான் உன் மேல். இதை விட்டு விட்டு, உன்னை இதற்கு மேல் வேறு மாதிரியாக யோசிக்க நான் காரணமாக இருந்திருந்தால் என்னை மன்னித்து விடு'' என்று சொல்ல வேண்டியதாயிற்று. ஓர் ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையில் ரசனைகளைப் பகிர்ந்து கொள்ளும் அளவிற்கு இருக்கும் நட்பு, திருமணத்தில்தான் முடிய வேண்டும் என்பதில்லை. திருமணம் வேறு மாதிரியானது.

இதை நான் சொன்ன பொழுது ஏற்றுக் கொள்ளும் நிலையைக் கடந்து, கிட்டத்தட்ட அவள் என்னைக் கணவனாக வரித்த நிலையில் இருந்தாள்.

புவனம் இப்பொழுது மீனாட்சியம்மாளுடன் வந்தாள்.

''தம்பி! உன்னைக் கைஎடுத்துக் கும்பிடறேன்'' என்று மிகப் பெரிய வார்த்தையுடன் ஆரம்பித்த மீனாட்சியம்மாள், ''இன்னிக்கு ரேணுகாவைப் பொண்ணு பார்க்க வராங்க. நீ இப்பவே கிளம்பிப் போயிடு'' என்றாள்.

எனக்கு மீனாட்சியம்மாள் சொன்னதைக் கேட்டு வருத்தம் ஏற்படவில்லை.

''மூணு பொட்டைப் பசங்க எனக்கு தம்பி. ரெண்டுக்குக் கல்யாணம் பண்ணி வைக்கிறதுக்குள்ள மூழி வெளிய வந்திருச்சு. இது ஆறு வருசமா கலியாணம் வேணாம்னு இருந்துடுச்சு. 27 வயசு ஆயிடுச்சு. வயசு கொடுக்கும் அனுபவமோ, இல்லை அது மனசு நெனப்பு தேசவா மறைய ஆரம்பிச்சிடுச்சோ தெரியலை, கல்

யாணத்துக்குச் சம்மதம் சொல்லி, ஜாதகம் பார்த்து, இதோ இன்னிக்கு பொண்ணு பார்க்க வர்றாங்க. ரெண்டு பொண்ணுக்கும் ஆறு தடவை மாப்பிள்ளை பார்த்து, சந்தையில் மாட்டை நிறுத்தறாப் போல பொண்ணை நிப்பாட்டி, பாடச் சொல்லி, ஆடச் சொல்லி... ரேணுகாவுக்கு பொண்ணு பார்க்கும் வயித்தெரிச்சல் ஒரே ஒரு வாட்டியோட போகட்டும் தம்பி. போயிடு!'' என்றாள்.

நான் கிளம்பத் தயாரானேன்.

''கோபால் ஒரு நிமிஷம்.''

குரல் கேட்டுத் திரும்பினேன்.

ரேணுகா.

கண்களில் அதே நாவற்பழம். சிரிப்பில் அதே மின்னல். இப்பொழுது நாடகத்திற்கு அரிதாரம் பூசிக் கொண்டதைப் போல பெண் பார்க்கும் ஒப்பனை மட்டும்.

''சௌக்யமா ரேணுகா?'' என் கேள்வி மடங்கி விட்டது.

''பிள்ளை வீட்டில் எப்போ வர்றாங்க?'' என்றாள் ரேணுகா மீனாட்சியம்மாவிடம்.

''பத்து மணிக்கு.''

''மணி ஒன்பதரைதான் ஆவுது. பத்து நிமிஷம் நான் கோபால்கிட்ட பேசணும் தனியா...'' என்றாள்.

''எவடி இவ? பொண்ணு பார்க்க



வர்றப்ப இப்படி கூத்தடிக்கறா? இவனை யாரு கழுகுக்கு மூக்கில் வேர்த்தா மாதிரி வரச் சொன்னது? ஆனா ஒண்ணு ரேணுகா, மாப்பிள்ளை வீட்டுக்காரங்க வர்றப்ப கோபால் இந்த வீட்டில் இருக்கக் கூடாது.''
மீனாட்சியம்மாளும், புவனமும் நிபந்தனையுடன் நகர்ந்தார்கள்.

''ஸாரி ரேணுகா...''

''அய்ய! எதுக்கு ஸாரியெல்லாம்?''

''இந்தச் சமயத்தில் நந்தி மாதிரி குறுக்க நிக்கறேனே...''

''இல்லை. நான் மனசில் ஒண்ணு நெனைச்சு வெச்சிருக்கேன். எனக்கு விடை தெரிஞ்ச க்ராஸ்வொர்ட் புதிரை அடுத்தவர்களிடம் போட்டு அவர்கள் விடை சொல்கிறார்களான்னு பார்க்கும் த்ரில்.''

''புதிர் எது? விடை எது?''

''புதிர் நான். விடை நீங்க.''

''புரியலை.''

''அதுக்குத்தான் பெண் பார்க்க அவங்க வர்றப்போ நீங்க போக வேண்டாம்னு சொல்றேன்.''

''வேணாம். சிக்கலாயிடும்.''

''ஆகாது. ப்ளீஸ் வெயிட் ஃபார் மீ.''

''சரி. நீ எப்படி இருக்கே ரேணுகா?''

''கல்யாணமானதுக்கப்புறம் என்னைப் பார்க்கக் கூடாதுன்னு தீர்மானமா கோபால்?''

''இல்லை.''

''சேலத்திலிருந்து கடலூர் 196 கிலோ மீட்டர்தான்.''

''தெரியும்.''

''பின் ஏன் வரலை?''

'''என் மனைவி விரும்பலை.''

''எதை?''

''நீ என்னை நேசித்ததை.''

''நான்தானே நேசிச்சேன். நீங்க இல்லியே?''

''அவ புரிஞ்சுக்கலை.''

''நீங்க புரியும்படி சொல்லி இருக்க மாட்டீங்க. நாலஞ்சு பொண்களைக் காதலிச்சிருக்கேன்னு சொல்வதோ, அல்லது காதலிக்கப்பட்டிருக்கேன்னு சொல்வதோ கணவர்களுக்குப் பெருமை. அந்நிய ஆடவனின் நிழலைக் கூடப் பார்த்து சலனப்பட்டுடக் கூடாது என்பதுதான் ரேணுகாக்களுக்கு விதி. இல்லியா?''

ரேணுகா மாறவில்லை. அதே கோபம். அதே சத்யம்.

''எனக்கும் ஆரம்பத்தில் நீங்க, ஸ்நேகம் வேற, கல்யாணம் வேறன்னு சொன்னதைத் தாங்கிக் கொள்ளும் வயசு அப்ப இல்லை. வரித்துக் கொள்ளுதல் என்பது பெண்களுக்கு மிகவும் சோதனை தரக் கூடியது என்பது புரிந்தது. எழுத்தில் நீங்க வெளிப்படுத்தின எத்தனையோ விஷயங்கள் என் கருத்துக்களோடு ஒத்துப் போனது ஒரு காரணம். பக்கத்து வீட்டில் இருந்தது ஒரு காரணம். 'இரு விழி மேடை' சிறுகதையை நான்தான் காப்பி பண்ணிக் கொடுத்தேன். ஞாபகமிருக்கா?''

''உம்....''

''அப்பல்லாம் ஒரு ரிஷிபத்தினியா என்னை பாவிக்கக்கிட்ட காலம்.''

''இப்பொ எப்படி சம்மதிச்சே?''

''வாட் டூ யூ மீன் பை திஸ்? எப்படி சம்மதிச்சேன்னா... என்ன அர்த்தம்? வரித்தல் என்பது இரண்டு பக்கமும் இருக்கணும். நான் நேசிச்சவர் என்னை நேசிக்கலைன்னா நான் அவருடைய நினைவுடன் வாழ்ந்து உயிர் விடணுமா? ஜான் க்ளாஸ்வொர்த்தியோட ஆப்பிள் மரம் கதையின் நாயகியைப் போல? அதே கதையை அபத்தம்னு ஆறு வருஷம் முன்னாடி நீங்கதான் சொன்னீங்க கோபால்.''

''ஸாரி...'' ஒற்றைச் சொல்லாய் உதிர்ந்தேன்.

''ரேணுகா! மணி பத்தடிக்கப் போவுது!'' புவனம் உள்ளே வந்து உறுமினாள்.

''ஓகே அக்கா! இவரை மட்டும் அனுப்பிடாதீங்க. மாப்பிள்ளைப் பையனை எடைபோட எனக்கு கோபால் அவசியம் வேணும்.''

**ப**த்து அடித்த பொழுது சரியாக அவர்கள் நுழைந்தார்கள். மொத்தம் நான்கு பேர். பையனின் பெற்றோர். பையன். ஒரு நடுத்தர வயது மாது. டிஃபன், காப்பி பரிமாறப்பட்டன. பையனிடம் ஒருவித கலபமின்மை தெரிந்தது. அதையும் மீறி அவனிடம் ஒரு கம்பீரம் இருந்தது. கத்தையாய் முன் நெற்றியில் விழுந்த க்ராப். கம்பளிப் பூச்சி மீசை. சற்று மேல் தூக்கிய மோவாய். சிவப்பு நிறம்.

பெயர் சப்தரிஷி. வயது முப்பது. படிப்பு எம்.பி.ஏ. உத்யோகம் ஒரு தனியார் நிறுவனத்தின் மானேஜிங் கன்ஸல்டன்ட். சம்பளம் அளிக்கும் சலுகைகளையும், வசதிகளையும் சேர்த்துக் கொண்டால், ஐந்து இலக்கை எட்டும்.

இவ்வளவும் ரேணுகா அளித்த தகவல்.

அவர்கள் கொஞ்சம் நரசிம்மராவ் பற்றிப் பேசினார்கள். கொஞ்சம் வினோத் கம்ப்ளி பற்றிப் பேசினார்கள். கொஞ்சம் கமல்ஹாசன் பற்றி பேசினார்கள். இடையில் விழுந்த மௌனத்தை ரிஷியின் அக்கா என்று அறிமுகப்படுத்திக் கொண்டவாளி, ''பொண்ணைப் பார்க்கலாமா?'' என்றாள்.

புவனம் ரேணுகாவை அழைத்துக் கொண்டு வந்தாள். ரேணுகாவிடம் ஒரு அப்



கணவன் : ஆஹா! சாம்பார் ரொம்பப் பிரமாதம்!

மனைவி : போதும்... போதும்.... ரொம்ப தற்பெருமை பேசாதீங்க!

- கு. அருணாசலம்

சரஸ் இருக்கிறது.

''நமஸ்காரம் பண்ணிக்கோம்மா!'' புவனம் கட்டளையிட்டாள்.

''அவசியமில்லைம்மா...'' ரிஷியின் அப்பா தடுத்தது மனதுக்கு இதமாக இருந்தது.

பவானி ரேணுகாவைப் பக்கத்தில் அமர்த்திக் கொண்டாள். அவள் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டே வந்த ரேணுகாவிடம், ''பாடத் தெரியுமா?'' என்ற கேள்விக்கு, ''ஒரு குறிப்பிட்ட ராகத்தில் பாடறேன். இன்ன ராகம்னு உங்களால் சொல்ல முடியுமா?'' என்று ரேணுகா எதிர்க் கேள்வி கேட்டது பெரியவர்களில் யாருக்கும் அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

ரிஷி மட்டும், ''குட்!'' என்றான்.

அப்புறம் எல்லாரும் இரண்டிரண்டு பேராகவோ, மூன்று மூன்று பேராகவோ பேசிக் கொண்டார்கள். ''நீங்க இஷ்டப்பட்டதைச் செய்யுங்க'' என்று சொன்ன ரிஷியின் அம்மா தனியாக ஒரு லிஸ்ட் கொடுத்தாள்.

முடிவாக ரிஷியின் அப்பா, ''பையன் பொண்ணோட தனியாப் பேசணும்!'' என்றார்.

நான் உட்கார்ந்த அறைக்கு ரிஷியும், ரேணுகாவும் போனார்கள். பிள்ளை வீட்டுக்காரர்கள் என்னை யார் எனக் கேட்க, ரகு, ''ஃபாமிலி ஃபிரண்ட்'' என்றும், புவனம், ''ரேணுகாவுக்கு அண்ணா மாதிரி''யும் என்றார்கள்.

சிறிது நேரத்தில் அறைக்கு வெளியில் எட்டிப் பார்த்த ரேணுகா, ''கோபால்! ஒரு நிமிஷம் வாங்களேன்.''

ரேணுகா வீட்டினரின் சுளித்த புருவங்கள் தூக்கி எறிய நான் அறைக்குள் நுழைந்தேன்.

''எல்லாரையும் யாருன்னு கேட்டுத் தெரிஞ்சுகிட்ட இவர் உங்களை யாருன்னு கேட்கிறார். என்னன்னு சொல்ல?'' சொல்லி விட்டு ரேணுகா சிரித்தாள்.

அவர்கள் இருவரிடமும் இறுக்கம் தளர்ந்திருப்பது தெரிந்தது.

ரேணுகாவின் கேள்வி என்னை சங்கடப்படுத்தியது.

''இவர் கோபால்.''

இரண்டு பேரும் கைகுலுக்கிக் கொண்டோம்.

''ஒரிஜினல் நேம் கோபால். கதையெல்லாம் எழுதுவார் 'வசீகரன்' என்னும் புனைபெயரில்.''

''ஓ! வசீகரன் நீங்கதானா?'' ரிஷியிடம் பரிச்சயம் தெரிந்தது.

''ஒரு காலத்தில் வசீகரன் என்னை வசீகரித்தவர்'' என்று சொல்லி விட்டு ரேணுகா தொடர்ந்தாள்.

''வசீகரம் என்றால்... கல்யாணம் பண்ணிக்கிட்டா இவரைத்தான் என்னும் ஆசையை வளர்த்து விட்டேன். பட். இவர் அப்படி ஒரு நினைப்பை என் மேல் வெச்சுக்கலை. இதை என்னிடம் சொல்லிட்டு, கல்யாணமாகி தனியாப் போயிட்டார். என்னை நான் சமாதானப்படுத்திக்க ஆறு வருஷமாச்சு. வேறு யார் மூலமாவும் இது உங்களுக்குத் தெரிய வருவதற்கு முன்னால் நானே சொல்லிடறது நல்லதில்லையா?'' என்றாள்.

என்ன ரேணுகா நீ? என்பது மாதிரி அவளைப் பார்த்தேன்.

ஆனால் அவள் மாப்பிள்ளைப் பையனுக்குப் பரீட்சை வைக்கிறாள்.

ரிஷி லேசாகக் கனைத்தான்.

''என்ன சொன்னீங்க ரேணுகா? வசீகரம்னா? ஆறு வருஷம் உங்கிட்டே சலனம் இருந்திருக்கலாம். எப்ப நீங்க பெண் பார்ப்பதற்கு ஒத்துக்கிட்டீங்களோ அப்பவே வசீகரனை மனசிலிருந்து தூக்கி எறிஞ்சிட்டதாத்தானே அர்த்தம்? அஞ்சாறு தடவை பெண் பார்க்கப்படும் பெண், அந்த அஞ்சாறு தடவையும் ஒவ்வொரு ஆடவனையும் வசீகரித்தது மாதிரிதானே அர்த்தமாகுது? லோ! இது எனக்கு ஒரு பெரிய விஷயமில்லை. உங்க ஸின்ஸியாரிட்டி எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு.''

''சபாஷ்'' வாய் விட்டே கூவி விட்டாள் ரேணுகா.

என் மனைவியிடம் வேலை நிமித்தமாகக் கடலூர் போனது, ரேணுகாவைப் பார்த்தது, ரிஷிக்கும் அவளுக்கும் கல்யாணம் நிச்சயமானது எல்லாவற்றையும் சொன்ன நான் அவள் ரிஷியை ஏற்றுக் கொண்டது எனக்கு லேசாக ஒரு பொறாமையைக் கிளறச் செய்தது என்பதை மட்டும் சொல்லவில்லை.

ஒரு மாதம் கழித்து ரேணுகா, ரிஷியின் கல்யாணப் பத்திரிகை வந்தது.

# மாயக் குதிரை

கிருஷ்ணா டாவின்ஸி



அந்த மாலை தினசரி மத்தியானம் வெளியிட்ட 'ஸ்பெஷல் எடிஷன்' சூடான கேக்குகள் போல் விற்றுத் தீர்ந்தது. போலீஸ் கமிஷனர் முத்துக்குமரவிடம் ஒரு பிரதி கொடுக்கப்பட, அவர் பதற்றமாகப் படித்துப் பார்த் தார்.

*சூர்யாவின் திடீர் மரணம்!*

*உண்மையில் மாரடைப்பா?*

*மறைக்கப்பட்ட உண்மைகள்!*

பிரபல நடிகர் சூர்யாவின் திடீர் மரணம் பற்றிய சில மர்மங்களை எமது நிருபர்கள் தகுந்த ஆதாரத்துடன் கண்டுபிடித்தார்கள்.

*மாரடைப்பு இல்லை.*

சூர்யா மாரடைப்பினால் இறக்கவில்லை என்பது அதிர்ச்சி தரக் கூடிய உண்மை. சென்னையில் உள்ள ஸ்புட்னிக் மருத்துவமனையின் எட்டாம் நம்பர் வார்டில் அவர் பாதுகாப்புடன் சிகிச்சையளிக்கப்பட்டார். கடந்த இரண்டு நாட்களாக அவருக்கு அங்கே தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டது. ஆனால் பலன் எதுவுமின்றி, நேற்று இரவு பன்னிரெண்டு மணியளவில் அவர் பரிதாபமாகத் துடிதுடித்துச் செத்தார்.

*காரணம் என்ன? விஷமா?*

சூர்யாவின் மரணத்திற்கான சரியான காரணம் எதுவும் கிடைக்கவில்லை. சூர்யாவின் மூக்கிலிருந்து ஒரு வகையான திரவம் வடிந்ததை நிருபர்கள் கவனித்தார்கள். அவர் விஷம் அருந்தியிருக்கலாம் என்று ஒரு மருத்துவர் குறிப்பிட்டுள்ளார்.

*மாயமாய் மறைந்த டாக்டர்கள்!*

ஸ்புட்னிக் மருத்துவமனையில் பணி புரியும் சில டாக்டர்கள் இருக்கும் இடம் பற்றித் தெரியவில்லை. அவர்களின் வீட்டில் அவர்கள் இல்லை. அவர்கள் எதற்காக அப்புறப்படுத்தப்பட்டார்கள்? சூர்யாவின் கை, கால்கள் இரும்பு வளையங்களில் பொருத்தப்பட்டு, அவருக்குச் சிகிச்சை அளிக்கப்பட்டது. ஏன்? உண்மையில் அவருக்கு என்ன ஆயிற்று?

*இன்ஷ்யூரன்ஸ் அதிகாரி தெரிவித்த தகவல்*

சூர்யா தன் உயிரை ஒரு கோடி ரூபாய்க்கு ஆயுள் காப்பீடு செய்துள்ளதாகத் தெரிகிறது. மனோகர் என்கிற பெயருடைய கம்பெனி அதிகாரி இதைத் தெரிவித்தார். அவர் மேலும் பேசுகையில், 'சூர்யாவின் உடலை இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி மருத்துவர்கள் பரிசோதிக்க வேண்டும்' என்று போலீஸ் அதிகாரிகளிடம் கேட்டதாகவும் அதை அவர்கள் மறுத்ததாகவும் தெரிவித் தார். இது பெருத்த சந்தேகத்தை ஏற்படுத்தியுள்ளது.

சூர்யாவின் மரணம் பற்றிய ரகசியங்களை எமது நிருபர்கள் தீவிரமாக விசாரித்து வருகிறார்கள்.

*சூர்யாவின் வாழ்க்கைச் சரித்திரம்*

சூர்யாவின் இயற்பெயர்.....

"வாட்ஸ் ஆல் தீஸ்?" என்றார் கமிஷனர். அவர் முகம் கோபத்தில் சிவந்திருந்தது. இந்தச் செய்தி ஏற்படுத்தப் போகும் கொந்தளிப்பு அவரைத் திகிலடையச் செய்தது. எஸ்.பி. பதற்றமாக அருகில் வந்து -

"ஸார்! மாநிலம் முழுகும் கலவரங்கள் ஆரம்பிச்சிடுச்சு. ஸிட்டி முழுக்க கதவடைப்பு பண்றாங்க."

"மைகாட்! லெட் மி கெட் தி சீஃப் செக்ரட்ரி."

அப்போது வாசலில் பயங்கரமான கூக்குரல்கள் கேட்டன. ஏதோ வெடித்தது.

"ஸார்! போலீஸ் வேனை எரிக்கிறாங்க."

கமிஷனர் விரைவாக வெளியே வந்து கலவரத்தைப் பார்த்தார். போலீஸ் காக்கி உருவங்கள் கூட்டத்தின் நடுவில் அரைபட்டுக் கொண்டிருந்தன. புகை மண்டலம் தெரிந்தது. கூக்குரல்கள் கேட்டன.



ஒருவர் : இந்த படத்தை தயாரிச்சவர் அரசியல்வாதியா!

நண்பர் : ஆமாம் எப்படி கண்டுபிடிச் சீங்க?

முதல் ஆசாமி : அலை கடலென திரண்டு வாரீர்னு வால் போஸ்டர்ல குறிப்பிட்டிருக்கே!

– எஸ். முகம்மது யூசுப்

கமிஷனர் எக்ஸ்ட்ரா ஃபோர்ஸ்"க்கு ஏற்பாடு செய்தார். வானை நோக்கித் துப்பாக்கியால் சுட, கூட்டம் எதற்கும் மசியவில்லை.

கமிஷனரை டெலிஃபோனில் முதலமைச்சர் அழைக்க, அவர் ஓடினார். முதலமைச்சரின் குரலில் எரிச்சல் தெரிந்தது.

"முத்துக்குமரன்! என்ன இதெல்லாம்?"

"ஸார்! பத்திரிகை செய்தி....

"சே! தலைவலி. மாநிலமெங்கும் கலவரம். கல்லூரி மாணவர்கள் ஸ்டிரைக் அறிவித்திருக்கிறார்கள். கதவடைப்பு! அவர்கள் என்ன கேட்கிறார்கள் தெரியுமா? விசாரணை! விசாரணை முடியும் வரை சூர்யாவின் உடலைத் தொடக் கூடாது...."

"ஸார்! அதையெல்லாம் தவிர்த்து விடலாம். உடனே தகனத்துக்கு ஏற்பாடு செய்து...."

"சே! சே! பிரச்னை இன்னும் கடினமாகும். இந்தச் சூழ்நிலையில் சவ ஊர்வலம் செய்வதைப் போல் முட்டாள்தனம் எதுவும் இல்லை. முத்துக்குமரன்! இந்த விவகாரத்தை நீங்கள் சரியாகக் கையாளவில்லை...."

"ஸார்...."

"அதைப் பிறகு கவனிக்கலாம். நான் சொல்கிறபடி செய்யுங்கள்... பத்திரிகையாளர்களை அழைத்துப் பேசுங்கள்... உண்மையைச் சொல்லி விடுங்கள்...."

"ஸார்....."

"வேறு வழியில்லை."

"அதையும் நம்ப மாட்டார்கள்."

"டாக்டர்களைப் பேசச் சொல்லுகிறேன். பி.எம். ரிப்போர்ட்டை அவர்களுக்குக் கொடுங்கள்."

"சரி ஸார்" என்றார் கமிஷனர்.

ஸ்புட்னிக் மருத்துவமனை சூறையாடப்பட்டது. அதன் வாட்ச் மேன் பயங்கரமாகத் தாக்கப்பட, வாசலில் நின்றிருந்த அருமையான கார்கள் நொறுக்கப்பட்டன. கண்ணாடி ஜன்னல்கள் சுக்கு நூறாக உடைந்தன. அரிவாள், கம்பிகள், கடப்பாறை, உருட்டுக் கட்டை போன்ற ஆயுதங்களுடன் கோபமான இளைஞர்கள் ராணுவம் போல் உள்ளே நுழைந்து ரிஸப்ஷனை அடித்து நொறுக்கினார்கள். டெலிஃபோன்கள் சுக்குநூறாயின. எக்ஸ்-ரே லேப் நொறுங்கியது. சோஃபா செட்டுகள் எரிந்தன. ஸலைன் பாட்டில்கள் கேஸ் கேஸாக உடைந்தன.

மருத்துவமனையின் மேல் புகை தெரிந்தது.

பிறகு, நெருப்பு.

டாக்டர் அமானுல்லா கோபமாகக் கமிஷனரைப் பார்த்தார்.

"ஐயாம் ஸாரி டாக்டர்!" என்றார் கமிஷனர்.

"நான் அப்பவே சொன்னேன். நஷ்டம் எத்தனை கோடி தெரியுமா? நீங்கள்தான் நஷ்ட ஈடு தர வேண்டும். வி ஆர் கோயிங் டு ஸ்யூ தி போலீஸ்."

"ப்ளீஸ், எல்லாம் நான் ஏற்பாடு செய்கிறேன். கொஞ்சம் ஒத்துழையுங்கள்."

"இனியுமா? போதும்."

"ஒரே ஒரு ப்ரஸ் இன்டர்வ்யூ."

"மைகாட்!"

"சி.எம். செய்யச் சொன்னார்."

"எதற்கு?"

"கலவரத்தை நிறுத்த அதுதான் ஒரே வழி."

"இந்த முட்டாள்தனத்தை எப்படி நிறுத்துவது? ஹவ் ஃபூலிஷ். ராபிஸ்ல செத்துப் போனார்னு உண்மையைச் சொன்னா கலவரம் அடங்கிடுமா? அவங்களுக்கு 'ஆன்ஸெட் ஸ்டேஜ்'னா புரியுமா?"

"வேற வழியில்லை டாக்டர்! கமிஷனர் ஆஃபிஸ் முன்னால ஆயிரக்கணக்குல தர்ணா பண்றாங்க. இதுவரை பத்து பேர் தற்கொலை செஞ்சாச்சு. வெறித்தனமான ரசிகர்கள் சூர்யா வீட்டைச் சுத்தி அசையாம இருக்காங்க....."

"தாராளமா ப்ரஸ் மீட் வையுங்க. ஆனா நான் நடந்த உண்மையை அப்படியே சொல்லுவேன்... சம்மதமா?"

"சொல்லுங்க!"

"ஐ'ல் இஷ்யூ தி பி.எம். காப்பி."

"ஓயெஸ்."

"தென், அரேஞ்ச் இட்" என்றார் டாக்டர் அமானுல்லா.

அந்த பரபரப்பான பத்திரிகை பேட்டி வெளியானது. சூர்யா இறப்பின் காரணம், 'ராபிஸ்'.

அகில உலக சூர்யா ரசிகர் மன்றத்தின் தலைவர் சிவப்பிரகாசம் ஒரு அறிக்கை வெளியிட்டார்.

''நமது அன்புத் தலைவன், ஆருயிர் அண்ணன், திரையுலக மேதை சூர்யா திடீரென்று நம்மை விட்டு மறைந்து விட்டார். இந்த அதிர்ச்சி நம்மையெல்லாம் நிலை குலைய வைக்கும் இந் நேரத்தில் நமது கடமைகளை நாம் மறந்து விடக்கூடாது. நீதியை நிலை நாட்ட வேண்டும் என்பதே நம் அண்ணன் சூர்யாவின் கொள்கை. சூர்யாவின் மறைவிற்குக் காரணம் வெறி நாய்க்கடி என்று மருத்துவர்களும் காவல் துறையினரும் சொல்கிறார்கள். ஆனால் நாய் கடித்தது எப்போது என்று யாருக்கும் தெரியவில்லையாம். நோய் முற்றிய நிலையில் மருத்துவமனைக்கு எடுத்து வந்தார்களாம். நான் கேட்கிறேன், இவையெல்லாம் உண்மைகள் என்றால் ஏன் இவற்றை மறைக்க வேண்டும்? எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்? சூர்யாவின் அன்பான போர் வீரர்களே! அண்ணன் சூர்யாவிற்கு நாய் என்றாலே அலர்ஜி என்பது நாமெல்லாம் அறிந்த ஒன்று. அப்படியிருக்க அவரை எப்படி நாய் கடித்திருக்க முடியும்? அதை சூர்யா அலட்சியப் படுத்தியிருக்கவும் சாத்தியமில்லை. இதன் பின்னால் பயங்கர ரகசியங்கள் இருக்கின்றன. அரசியல் ரீதியாகவும், தொழில் ரீதியாகவும் நம் தங்கத் தலைவனுக்கு நிறைய எதிரிகள் உண்டு. அவர்களின் திட்டத்தால், பயங்கரத் திட்டத்தினால் சூர்யாவின் உயிர் பறிக்கப்பட்டிருக்கிறது. இந்த உண்மைகளைக் கண்டறியாமல் நமக்கு ஊண் இல்லை. உறக்கமில்லை. நமது அன்பு அண்ணியின் நெற்றித் திலகத்தை அழித்த கயவன் யார் என்பதைக் கண்டுபிடிக்க சில திட்டங்களை நாம் தீட்ட வேண்டும். இன்று அவசரமாகக் கூடிய செயற்குழு கூட்டத்தில் சில முடிவுகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. அதைச் செயல்படுத்துவோம். அண்ணன் சூர்யாவின் இறுதி ஊர்வலம் அமைதியாக நடைபெற ஒத்துழைப்பீர். சூர்யாவின் மரணத்திற்கான உண்மைக் காரணங்களை அறியும் வரை இந்த மாநிலம் அமைதி பெறாது. இதை ஒரு எச்சரிக்கையாகச் சொல்லிக் கொள்கிறேன்.....

சூர்யாவின் இறுதி ஊர்வலத்திற்கு ஒரு லட்சம் பேருக்கு மேல் கூட்டம் கூடியது. அலங்காரமான வண்டியில் சூர்யா படுத்திருக்க, மலர்கள் அவனை மூடியிருந்தன.

திரை ரசிகர்களின் கனவு நாயகன், ஏழைகளின் தேவன், இணையில்லா நடிகன் சூர்யா, ஆரஞ்சு வானப் பின்னணியில், சந்தனக் கட்டைகளால் அடுக்கப்பட்டு, எரிக்கப்பட்டான்.

புகையாகக் காற்றில் கரைந்தான்.

முதலமைச்சரின் முன்னால் ஐ.ஜி. தனசேகரன் பவ்யமாக அமர்ந்திருந்தார். அவர் கையில் ஒரு ஃபைல் இருந்தது. முதலமைச்சர் ஒரு ஃபைலில் கையெழுத்திட்டு, மூடிவைத்து, நிமிர்ந்து, ''ம்'' என்றார்.

தனசேகரன் பேச ஆரம்பித்தார். ''ஸார்! ரசிகர் மன்றத்தின் செயற்குழு கூட்டத்தில் பேசிய விஷயங்களை ஒட்டுக் கேட்டோம். அதன் ரிபோர்ட் இதில் இருக்கிறது.'' அதை

## 'வாஜ்பாய் பாகம்'



வாஜ்பாயி பிரம்மசாரி என்பதும் நன்றாக சமைக்கத் தெரிந்தவர் என்பதும் பலருக்கும் தெரிந்த விஷயம். ஆனால் வாஜ்பாயியும் அவர் தந்தை கிருஷ்ண பிஹாரியும் 'கிளாஸ் மேட்கள்' (வகுப்பு தோழர்கள்) என்பது எத்தனை பேருக்கு தெரியும்? அதிசயமாக இருக்கிறதா?

கல்வி இலாகாவில் வேலைப் பார்த்து வந்த வாஜ்பாயின் தந்தை கிருஷ்ண பிஹாரி உத்தியோகத்திலிருந்து ரிடையர் ஆனதும் தொடர்ந்து படிக்க விரும்பினார். எனவே மகன் வாஜ்பாயியும் தந்தை கிருஷ்ண பிஹாரியும் கான்பூர் யுனிவர்சிடியில் ஒன்றாகச் சட்டம் படித்தார்கள். கட்டு பாடான இந்து குடும்பம் என்பதால் தங்கியிருந்த ஹாஸ்டல் மெஸ்ஸில் சாப்பிட வாஜ்பாயியின் தந்தை விரும்பவில்லை. எனவே தந்தையும் மகனும் சொந்தமாகத் தாமே சமைத்து சாப்பிடத் தொடங்கினர். அன்று தொடங்கிய சமையலைப் பழக்கம்தான் இன்று வரை வாஜ்பாயை தொடர்கிறது.

– எஸ். ஆலன்

மேஜையில் வைத்தார். முதலமைச்சர் அதை மேலோட்டமாகப் பிரித்துப் பார்த்து, ''சுருக்கமாகச் சொல்லுங்கள்'' என்றார்.

''அவர்கள் நிதி திரட்ட ஆரம்பித்திருக்கிறார்கள். ஒரு பெரிய தொகையை அட்வான்ஸாகக் கொடுத்து சூர்யாவின் மரணத்திற்கான காரணத்தைக் கண்டு பிடிக்கப் போகிறார்கள்....''

''யாரிடம்?''

''சென்னையில் உள்ள ஒரு தனியார் ஏஜென்ஸியிடம் 'மெட்ராஸ் செக்யூரிட்டி ஸர்வீஸஸ்' என்று பெயர்....''

முதலமைச்சர் மெதுவாக தாடையைத் தடவியபடி, பிறகு தீர்மானித்து, ''அவர்களைக் கண்காணியுங்கள்'' என்றார்.

(தொடரும்)



**மு**தல்வர் தொகுதி என்றாலே செல்லக் குழந்தைதான். அதனால்தான் பள்ளிக்கூடக் கட்டடத்துக்காக, பாட நூல் நிறுவனத்திலிருந்து ஒரு கோடி ரூபாய்; பர்கூரைச் சுற்றித் தொழிற் சாலைகள்; அரசு பெண்கள் கல்லூரி; பாடநூல் நிறுவனக் கிடங்கு என்று ஸ்பெஷல் கவனிப்பு இருக்கிறது. மாவட்டம் முழுமைக்குமான திட்டங் களின் மதிப்பு சுமார் 240 கோடி ரூபாய் என்றால் அதில் முதல்வர் தொகுதியான பர்கூருக்கு மட்டுமே 40 கோடி ரூபாய்! அதிலும் துவங்கப்பட்ட பல திட்டங்கள் நடக்க ஆரம்பித்து விட்டன என்பது படு ஆச்சரியம்!

பர்கூர் பிளாக், கூடுதல் வட்டார வளர்ச்சி அலுவலர் கே. ரங்கசாமி, அலுவ லக வளாகத்துக்கு உள்ளேயே அமைந்திருக் கும் செயற்கை வைரப் பட்டை தீட்டும் பயிற்சி பெறும் பெண்களுக்குக் கிடைக்கும் பயன்களை எடுத்துச் சொன்னார் :

''எல்லாருமே சுற்று வட்டாரத்தில் இருக் கும் கிராமங்களிலிருந்து வரும் பெண்கள்.



★ செயற்கை வைரம் :

பட்டை தீட்டும் பயிற்சி

ஒரே சமயத்தில் இருபது பேர் பயிற்சி பெறலாம். ஒவ் பிறகு, தினமும் சுமார் ஐம்பது ரூபாய் சம்பாதிக்கலாம் ஜெம்பார்க் நிறுவனமே விற்பனைக்கும் இந்தப் பட்டை எடுத்துக் கொண்டு விடுகின்றது. எனவே மார்க்கெட்டி

இதே மாதிரி, பக்கத்தில் உள்ள சந்தூரிலும் ஏப் பயிற்சி மையம் ஆரம்பிக்கத் திட்டமாம். ''மொத்த அதாவது நானூறு பேருக்கு இந்தப் பயிற்சி அளிக்கத் சாமி.

வேங்கடசமுத்திரத்திலும் அறுபத்தேழு லட்ச ரூ



★ வெற்றிகரமான போர்வை திட்டம்

குடும்பங்களுக்குப் பயன்தரும் திட்டங்கள் தீட்டப்பட்டிருக்கின்றன. இதுவும் பர்கூர் பிளாக்கைச் சேர்ந்ததுதான்.

**ப**சுஞ் சோலையாகக் காட்சியளித்த பர்கூர் கிராமத்துக்கு உள்ளே நம்மை அழைத் துச் சென்ற ரங்கசாமி, எதிரும் புதிருமாக இரண்டு பெரிய கட்டடங்களின் நடுவே நின்று, ''இங்கே கம்ப்யூட்டர் பயிற்சி, அங்கே தையல் பயிற்சி!'' என்றார் அதிமுக

# ஜெ. தொகு
# செல்லக் குழந்

...ருவரும் பயிற் சிக்குப்
...ற்சி அளிக்கிற இருச்சி
...ட்பட்ட வைரங்களை
...ச்னையே இல்லை!''
...முதல் வாரத்திலிருந்து
...ருபது கிராமங்களில்,
...ம்!'' என்கிறார் ரங்க

... அளவில், சுமார் 250



* இங்கே விலை மலிவு - தரமான சரக்கு!



...மாக.

கூட்டுறவு தொழிற் பயிற்சி மையம் என்ற இந்தக் கோவாபரேடிவ் இண்டஸ்ட்ரியல் டிரெயினிங் இன்ஸ்டிட்டியூட்டுகள் இரண்டிலுமே நிறைய மாணவர்கள், மாணவிகள்!

''சென்ற செப்டம்பர் 16 ஆம் தேதிதான் இந்தப் பயிற்சி மையங்களை ஆரம்பித்தோம். ஒரு வருடப் பயிற்சி கொடுக்கிறோம்!'' என்றார் முதல்வர் துரைசாமி. இவர் ஓய்வு பெற்ற நெடுஞ்சாலைப் பொறியியல் நிபுணர்.

இங்கு பயிற்சி பெறுவோருக்கு கூட்டுறவு வங்கிகளில் அல்லது சமூக நலத் துறையில் வேலை கிடைக்க வாய்ப்புகள் அதிகம் என்றார்.

''எலக்ட்ரீஷியன் பயிற்சி ஆரம்பிக்கவும் திட்டம் இருக்கிறது!'' என்றார் துரைசாமி. அதே மூச்சில், ''மோட்டார் மெகானிக், ஃபிட்டர், வயர்மேன், வெல்டர், கார்ப்பெண்டரி, சிவில் டிராஃப்ட்ஸ்மேன், டீவி ரிப்பேர் எல்லா பயிற்சிகளும் தொடங்கி 250 மாணவ - மாணவிகள் பயிற்சி பெறும் அமைப்பாக உருவாக்கத் திட்டம் போட்டிருக்கிறோம்!'' என்றார். எல்லாம் செய்யலாம். முதல்வர் தொகுதியல்லவா?

பாக்கியம் செய்த தொகுதி, பர்கூர் தொகுதி. அதனால்தான் தமது தொகுதி மக்களிடமிருந்து மனுக்களைப் பெற்றுக் கொள்வதற்காகவே பர்கூரில் ஓர் அலுவலகத்தைத் திறந்திருக்கிறார் ஜெ. அதில் சி. வி. ராஜேந்திரன், சத்தார், கோவிந்தராஜன் என்று மூன்று பேர் மாறி மாறி இருந்து கொண்டு மனுக்களைப் பெற்றுக் கொள்கிறார்கள். நாங்கள் சென்ற போது சி. வி. ராஜேந்திரன் என்ற இளைஞர் இருந்தார்.



* ''ஸ்ட்ராங் லேடி!''

''உங்களிடம் எந்த மாதிரி மனுக்கள் வருகின்றன?''

''பெரும்பாலும் பொருளாதார உதவி கோரும் மனுக்கள்தான். வேலை வாய்ப்பு, மருத்துவ உதவி என்று கேட்டு வரும் மனுக்களும் உண்டு.''

''அவற்றை எல்லாம் என்ன செய்வீர்கள்?''

''வாரத்துக்கு ஒருமுறை சென்னைக்கு வந்து 'மேடத்தி'டம் நேரில் கொடுத்து விடுவோம்.''

''கட்சிக்காரர்களுக்கு மட்டும்தான் சலுகைகள் கிடைக்குமா, இல்லை...''

''சுமார் ஆயிரம் பேருக்கு மேல் பயனடைந்திருக்கிறார்கள், இதுவரை. கட்சிப் பாகுபாடு பார்ப்பதே இல்லை. இவற்றையெல்லாம் முழுக்க முழுக்க முதல்வரேதான் கவனித்து, உதவி பெறும் நபர்களைத் தேர்ந்தெடுக்கிறார்.''



● ப. வேங்கடசாமி : ''சிறப்புத் திட்டங்கள் நிறைய...''

● ராமசாமி - வட்டார வளர்ச்சி அலுவலர்





● பி. சி. கிருஷ்ணன் : வங்கிக் கிளை

மார்க்கெட்டை எட்டிப் பார்த்தோம். சூரத், பம்பாய் முதலிய வடக்கத்திய ஊர்களிலிருந்து ஒட்டுமொத்தமாய் வாங்கி வந்து, மற்ற இடங்களை விட ஐம்பது ரூபாய் குறைந்த விலைக்கு இங்கே விற்கிறார்கள். ''ஒரே ஒரு இந்தியன் வங்கி மட்டும்தான் இங்கே இருக்கிறது. டிராஃப்ட் எடுக்க முடிவதில்லை. வங்கியில் ஆட்கள் போதாது என்கிறார்கள். இன்னொரு வங்கிக் கிளை திறக்கணும்!'' என்கிறார் செயலாளர் பி. சி. கிருஷ்ணன்.

முன்பு தண்ணீர்ப் பிரச்னை இருந்தது இந்தப் பகுதியில். ஹேண்ட் பம்ப், பவர் பம்ப் எல்லாம் வைத்துக் கொடுத்திருக்கிறார், குடிநீர் வாரிய எக்ஸிக்யூடிவ் இஞ்சினியர். இப்போது தண்ணீர் பிரச்னையே கிடையாதாம்.

ராஜேந்திரனுக்கு ஒரு ஸ்கூட்டர் கொடுத்திருக்கிறார் முதல்வர். மற்ற இருவருக்கும் கூடத்தான். ஒரு பஞ்சாயத்துக்கு ஒரு சைக்கிள் வீதம், கட்சிக்காரர்களைத் தேர்ந்தெடுத்துச் சுமார் 100 சைக்கிள்கள் கொடுத்திருக்கிறார் - தொகுதிப் பணி செய்ய. (அதில் இரண்டு மூன்று பேர் ஓர் அவசரத்துக்குச் சைக்கிளை விற்று விட்டுப் பிறகு மாட்டிக் கொண்டு விழித்த கதையும் உண்டு என்று கிசுகிசுத்தார் ஒருவர்).

நிறையவே டர்ன் ஓவர் இருக்கும் போலிருக்கிறது. (அவர் வருமான வரித் துறைக்குப் பயந்தோ என்னவோ குத்து மதிப்பாகக் கூடச் சொல்லத் தயங்கினார்.) இந்தியன் வங்கியோ, ஸ்டேட் வங்கியோ கண் (கிளை) திறந்து பார்க்கணும்!



● ராஜேந்திரன் : தொகுதிப் பணிக்கு ஸ்கூட்டர்

பாராட்டுக்குரிய சில விஷயங்களை ஜெ. செய்து கொண்டிருந்தாலும் ஒரு குறை. பர்கூரை விட்டுப் புறப்படு முன் ஒரே இடத்தில் 134 கடைகள் உள்ள ஜவுளி

கிருஷ்ணகிரி பைபாஸ் ரோடு அருகே, 'பல்நோக்கு சமுதாயக் கூடம்' இருப்பதைப் பார்த்தவர்கள், இது ஏதோ பல் வைத்தியம் சம்பந்தப்பட்ட சமாசாரம் என்று இனி தாண்டிச் சென்று விடாமல் இருக்க ஒரு செய்தி :

உள்ளே பதினோரு குடும்பங்களின் கைவண்ணத்தில், நூற்றுக்கணக்கில், அட, ஆயிரக்கணக்கில் விநாயகர் பொம்மைகள்!

''தர்மபுரி, ஹோசூர், சென்னை கண்காட்சிகளில் இவை இடம்பெற்றதும், அரசே கட்டடம் கொடுத்ததும், விற்பனை ஒழுங்காக இருப்பதற்குக் காரணங்கள்!'' என்கிறார் கார்த்திகேயன்.

''விநாயக சதுர்த்தி சமயத்தில் அமோக விற்பனை'' என்கிறார் மல்லிகா. சீசனுக்கு இரண்டு மாதம் முன்பு வேலையை ஆரம்பித்து விடுவார்களாம்.

விநாயகர் மட்டுமல்ல, அவர் அப்பா பரமசிவம், அம்மா பார்வதி எல்லாரையுமே அழகழகான சிலை வடிவில் உருவாக்கி வைத்திருக்கிறார்கள் இந்தக் கிராமக் கலைஞர்கள். இது அரசின் ஊரக, மகளிர் - குழந்தைகள் மேம்பாட்டுத் திட்



★ கம்ப்யூட்டர் கிராமம்!

டத்தில் செயல்படுகிறது. (ரொம்பச் செல்லமாக டோக்ரா திட்டம் என்கிறார்கள்!)

''ஐந்து நாட்களுக்கு ஷில்லாங்குக்குக் கூட்டிக் கொண்டு போய், அங்கே உள்ள கிராமியக் கலைஞர்களுக்கு இவர்களை அறிமுகம் செய்து வைத்தோம். நம்முடைய படைப்புகளைப் பார்த்து ஆச்சரியப்பட்டுப் போனார்கள்! அவர்கள் கலை, துணிகளை ஆதாரமாகக் கொண்டவை!'' என்கிறார் கார்த்திகேயன்.



★ தொகுதியில் 'ஜெ' அலுவலகம்

**த**ர்மபுரியில், மாவட்ட வளர்ச்சிக் கழகத்தின் மானேஜிங் டைரக்டர் ப. வேங்கடசாமியைச் சந்தித்த போது, பர்கூருக்கு மட்டும்தான் ஸ்பெஷல் கவனிப்பு என்பதில்லை என்ற 'ஆறுதலான' தகவல் கிடைத்தது.

''வேறு மாவட்டங்களில் இல்லாத அமைப்பு இது!'' என்றார் வேங்கடசாமி. ''இந்திய கம்பெனிகள் சட்டத்தின் கீழ் பதிவு பெற்றது இது. இதில், மாநில அளவிலான உயர் அதிகாரிகள் - எல்லாம் மூத்த ஐ. ஏ. எஸ். - உறுப்பினர்கள். ஆகவே அரசை வெகு எளிதாக எந்த உதவிக்கும் அணுகலாம்!''

நவம்பர் 91ல், பதினைந்து லட்சம் ரூபாய் முதலீடாகக் கொடுத்தது அரசு. இன்றைக்கு 150 லட்ச ரூபாய்ச் சொத்து மதிப்புக்கு அதிபதி இந்த மாவட்ட வளர்ச்சிக் கழகம்! ''எங்களுக்கு வாடகை மட்டுமே இருபத்தோரு லட்ச ரூபாய் வருகிறது!''

''வளர்ச்சி என்றால் எந்த விதத்தில்...?''

''குழந்தைகள் பூங்கா, எங்களுடைய நிதியிலிருந்து கட்டிக் கொடுத்திருக்கிறோம். ஸ்டேடியம், நீச்சல் குளம் எல்லாம் கட்டிக் கொடுத்திருக்கிறோம். பேருராட்சியில் மார்க்கெட் காம்ப்ளெக்ஸ் கட்டிக் கொடுத்திருக்கிறோம்!''

இந்த மாவட்டத்தில் படித்து, வேலை இல்லாமல் இருக்கும் முதுநிலைப் பட்டதாரிகள், சயன்ஸ் பட்டதாரிகள், ஐ.டி.ஐ. சர்ட்டிபிகேட் பெற்றவர்கள் வசதிக்காக, வருடத்துக்கு ஒருமுறை விழிப்புணர்ச்சி முகாம் நடத்தி வருகிறது கழகம்.

''இதில் தியரிடிகலாக இல்லாமல், டி.வி.எஸ்., டைடன் போன்ற பிரபல நிறுவனங்களிலிருந்து அதிகாரிகளை வரவழைத்து வகுப்புகள் எடுக்கச் செய்கிறோம்!''

நவீன கருவிகள் கொடுத்து, செய்யும் தொழிலைச் செம்மையாகச் செய்ய உதவுகிறது கழகம். 'பாட்டா' ஷூக்கள் கூட இங்கே அந்தக் கம்பெனிக்காகத் தயாராகிறதாகச் சொன்னார் வேங்கடசாமி.

வேளாண்மைக் காலம் இல்லாத போது, சேலம், பெங்களூர் என்று பிழைப்பை நாடிச் செல்லுபவர்களைத் தடுக்க, வேலை வாய்ப்பு உறுதியளிப்புத் திட்டங்களும் உண்டு. போதாக்குறைக்கு இரண்டு ஹோட்டல்களை வேறு பராமரிக்கிறது இந்தக் கழகம்! - ஒன்று தீர்த்த மலையில், இன்னொன்று ஹோகேனகலில்.

''மாம்பழம் எங்கள் ஊரில்தான் மிகச் சிறந்த வகை கிடைக்கிறது. திராட்சை அபரிமிதமான விளைச்சல். ஆனாலும் என்ன? எங்களுக்கு ஒரு 'ஸ்ட்ராங் லாபி' கிடையாது!'' என்கிறார் வேங்கடசாமி.

முதலமைச்சரை விட ஒரு ஸ்ட்ராங் லாபி வேண்டுமா என்ன?

**- சாருகேசி**

வண்ணப்படங்களும் தருமபுரிச் செய்திகள் தொடர்பான மற்ற படங்களும்:
**கோபிநாத்**

# எண்ணங்கள்

**வி**டியற்காலையில் கனவு எப்போதுமே கொஞ்சம் நீளமாய்த்தான் இருந்திருக்கிறது. சினிமா போல காட்சியாகவே. இந்த முறை அப்படி அல்ல. ரொம்ப சின்னதாக இருந்தது. உடனே முடிந்து விட்டது. விஜயன் வந்தாற்போல் லேசாய் ஞாபகம் இருந்தது. உடனே விழித்துக் கொண்டான்.

விஜயனுக்குக் கல்யாணமாகிப் பத்து நாட்களுக்கு மேலாகி விட்டது. அத்தை வீட்டு விருந்து, சித்தி வீட்டு விருந்து என பெரிய 'லிஸ்ட்' போட்டு அவனைத் தள்ளிக் கொண்டு போய் விட்டார்கள்.

ஜன்னல் வழியாகப் பார்க்க, நீளமாய்ப் பொறுக்கு தட்டிப் போய் செங்கல் நிறத் தரை தெரிந்தது. பாலைவனம் போல. தொலைவில் இரண்டு முந்திரி மரங்கள். சிவப்பு சிவப்பாய்ப் புள்ளி தெரிந்தது. பழசீசன் போலிருக்கிறது. காலையிலேயே வெப்பம் தெறித்தது. சேதுராமனுக்குச் சலிப்பாய் இருந்தது.

விஜயன் வீட்டில் இவனுக்கென்றே ஒரு தனி அறை உண்டு. இரண்டு செட் டிரஸ்ஸாவது, மாற்றிக் கொள்ள லுங்கியும் எப்போதும் தயாராய். சேதுவின் நிறைய வாழ்க்கை அங்கேதான் கழிந்திருக்கிறது. படித்தது பூராவும் அங்கேதான். விஜயனோடு அவனுக்கு ஏற்பட்ட நட்பின் பரிமாறல்கள். விஜயன் 'வேண்டாண்டா வேண்டாண்டா' என்று பதறப் பதற திருட்டு 'தம்' அடித்தது கூட அங்கேதான். ஜன்னல் திறக்க 'ஹோ'வென ராட்சசத்தனமாய் ஒரு தூங்கு மூஞ்சி மரம். பச்சைப் பசேலென்று. அதன் பூக்கள் தனி ரகம். பார்க்க பாராசூட் போல ரோஸ் கலராய். தண்ணீரில் விழுந்தால் சின்ன ஸ்டீமர் போல. நிறைய விடியற்காலைகள் அந்த தூங்கு மூஞ்சி மரத்தோடு ரம்மியமாய்க் கழிந்திருக்கின்றன.

**ப**டியிறங்கிய போது யாரோ கூப்பிட்டது போல் தெரிய, பின்னால் திரும்பினான். அம்மா!

''என்ன?''

''வா...'' என்றாள்.

''என்ன?''

''வா.. உன் கூட கொஞ்சம் பேசணும்...''

உள்ளே போக, ''உட்கார்'' என்றாள்.

''எங்கே போற?''

''விஜி வீட்டுக்கு...''

''வந்திருப்பானா?''

''போனாத்தான் தெரியும்...''

சேதுராமனை, அவன் கண்களை ஊடுருவிப் பார்த்து விட்டு நீளமாய்ப் பெருமூச்சு விட்டாள்.

''லோ... உன் ஃப்ரெண்டு கல்யாணம் முடிஞ்சது. உனக்கு இருக்கற ஒரே சிநேகிதன். ரொம்ப கஷ்டப்பட்டாயோ?''

''பின்ன...''

**அ**து தனிக் கதை. கல்யாணத்தன்று விடிகாலை எல்லா ஏற்பாட்டையும் முடித்து விட்டு மூன்று மணிக்கு தென்னை மட்டை குருத்தோலை முடைந்து கொண்டிருக்கையில் சமையல் ஆள் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டான்.

> **உள்ளே போன போது சிவப்புக் கலரில் நீளநீளமாய் பஜ்ஜி வைத்தார்கள். சாப்பிட கூச்சமாய் இருந்தது. இத்தனை நாள் இல்லாத கூச்சம். ரொம்பப் புதுசாய்...**

''இந்தத் தண்ணியில சமைச்சா சோறெல்லாம் ம ஞ் ச ளா யி ரு ம் ங் க... கமறும்...''

பதறி சத்திரக் காரனைக் கேட்க, அவன் ''ஆமாங்க...'' என்றான் அமைதியாய்.

''இத என்யா முன்னாடியே சொல்லலை...''

''யாரும் கேக்கலீங்களே...''

விஜயன் மாமாவை அணுக, ''என்ன இப்போ... சோத்துல மஞ்சள் போட்டாக்கன்னு சொல்லிடலாம்'' என்று நிலைமை புரியாமல் பேசிக் கொண்டிருந்தார்.

கல்யாணத்துக்கு வந்திருந்த ஒருவர், ''இந்தப் பக்கத்து கேணி அப்படித்தாங்க. ரெண்டு தெரு தள்ளி நல்ல கேணி இருக்கு. தண்ணி சக்கரையாட்டமா அப்படி ஒரு டேஸ்ட்...'' என்று அவர் பாட்டுக்குத் தொடர்ந்து கொண்டிருக்க,

திருவையாறு பாலுசாமி

சேது வாடகைக்கு மாட்டு வண்டி பிடித்தான். இரண்டு ஆட்களை கூலிக்குப் பேசினான். மூன்று தண்ணீர்க் கொப்பரைகளை வண்டியில் ஏற்றி, மொத்தம் ஆறு நடை அடித்தான். வியர்வை பெருகி, புது சட்டை சகதியானது. ஆறாவது நடை முடித்து மூச்சிரைக்க உள்ளே போக விஜயன் தாலி கட்டுவது அட்சதை மழைக்கு நடுவே தெரிந்தது. சேது களைத்துப் போயிருந்தான்.

"எல்லாம் முடிஞ்சது. விஜியும் விருந்துக்குப் போயிருக்கான். இப்ப திருப்திதானே?"

"நிச்சயமா..."

அம்மா சிநேகிதமாய் இருப்பது கஷ்டம். சேதுவின் அம்மா அவன் சிநேகிதி. பிறகுதான் அம்மா.

"எத்தனை வருஷமா உனக்கும் அவனுக்கும் பழக்கம்..." தெரிந்து கொண்டே கேட்கப்படும் இந்தக் கேள்வி ஒரு வகை. அதன் அர்த்தம் சேதுவுக்குப் புரியும்.

" 'எலிமெண்டரி ஸ்கூல்ல'யிருந்து இன்னி வரை..." என்றான் பொறுமையாய். "கிட்டத்தட்ட பன்னிரெண்டு வருஷம்..."





ஜவுளி கடையில் பெண் : சாயம் போகாத சேலை ஒண்ணு எடுங்க.

கடைக்காரர் : அம்மாவுக்கு அந்த வெள்ளைச் சேலையை எடுத்து காட்டப்பா.

- ஜான்சாலமன்

''பன்னெண்டு வருஷப் பழக்கம் காயப்படாம இருக்கணும்னா, நீ அவன் வீட்டுக்குப் போறதையும் அங்கேயே சாப்பிட்டுத் தூங்கறதையும் குறைக்கணும்...''

அதிரடியாய் இருந்தது.

''சின்னச் சின்ன தியாகங்கள். ரெண்டு பேருமே பண்ண வேண்டி வரும்...''

''அப்படின்னா புரியலியே...?''

''கொஞ்சம் நாளானா உனக்கே புரியும்...''

''என்ன சொல்லு.. இப்பவே புரிஞ்சுக்கறேன்...''

''முன்னைப் போல சகஜமா உன்னால் அங்கே பழக முடியும்னு நினைக்கிறியா?''

''ஏன் முடியாது? அவன் எப்பவுமே என் ஃப்ரெண்ட்தான். அவன் எனக்காக...''

''உயிரைக் கொடுப்பான்'னுல்லாம் வசனம் பேசிக்கிட்டுத் திரியாதே. அவனை நம்பி இன்னொருத்தி வந்தாச்சு. ஒரு பொண்ணோட புருஷன் அவன்...''

''இதென்ன கதையா இருக்கு. பொண்டாட்டியோட இருக்கும் போது புருஷன். என் கூட இருக்கும் போது நண்பன்...''

''ரெண்டும் சமம்கிறியா...?''

''நிச்சயமா...''

''கஷ்டப்படப் போறே!'' என்றாள். ''நீ ரொம்ப கஷ்டப்படுவ. உங்க ரெண்டு பேருக்கும் நடுவுல ஒரு சுவர் எழும்பின மாதிரி தெரியல...?''

''இல்ல...''

'' 'அட்லீஸ்ட்' ஒரு திரை...?'

''இல்ல...'' என்றான். ''ஏன்னா அது உங்க காலமா இருக்கும். அதை விட்டு இன்னும் வெளியவே வர்லயே நீ. இந்த மாதிரி பஞ்சாங்கமெல்லாம் அப்ப எடுபட்டிருக்கலாம். இப்ப நடக்காது...''

''நடக்காது போனா சந்தோஷம் தாம்பா எனக்கு...''

அழுத்தமாய் முடித்தாள்.

குழப்பமாய் இருந்தது.

'இப்படியெல்லாம் கூட பிரச்னை வருமா என்ன? இல்லை அம்மாதான் அனாவசியமாய்ச் சிந்திக்கிறாளா? நட்பு பிரியுமென்று அம்மா சொல்லவில்லையே? ஒரு மாற்றம்... ஒரு கலக்கம்... ரெண்டு பேர் நடுவில் ஒரு சுவர். சுவர் யார்? அவன் பெண்டாட்டியா?''

விஜயன் வீட்டுக்குச் சாயங்காலம் போய்க் கொள்ளலாம் என நீட்டிப் படுத்தான். நெடுநேரம் யோசித்ததில் அம்மா பேசியது மடத்தனம் என்றும் நிறைய புத்தகம் படித்து மூளை பிசகியிருக்கிறாள் என்றும் புரிந்தது.

தூங்கி எழுந்த போது தெளிவாக இருந்தது. அம்மாவோடு பேசியது கனவு மாதிரி இருந்தது.

விஜயன் வீட்டுக்குப் போன போது கொஞ்சம் கூட்டமாய் இருந்தது. வீடு நிறைய மாறியிருந்தது. பாயசமோ எதுவோ வாசனையாய் இருந்தது. விஜயனின் மாமனார் (பெரிய தொப்பை) ''வாப்பா!'' என்றார்.

விஜயன் வந்து ''வாடா'' என்றான். முன்னிலும் மலர்ச்சியாய் இருந்தான். அவன் மாமனாரிடம் திரும்பி, ''ேதெரியுதில்ல...'' என்றான்.

''தெரியுதே... தண்ணி கொண்டு வரும் பையன்தான்...''

உள்ளே போன போது சிவப்புக் கலரில் நீளநீளமாய் பஜ்ஜி வைத்தார்கள். சாப்பிட கூச்சமாய் இருந்தது. இத்தனை நாள் இல்லாத கூச்சம். ரொம்பப் புதுசாய்...

சாப்பிட்ட பிறகு விஜயன் கூப்பிட்டான்.

''சியாமளா! சேது... ஞாபகம் இருக்கா?''

சியாமளா கையில் மருதாணி 'பளிச்' சென்று தெரிந்தது. கைத்தறிப் புடைவை.

''ஸாரிங்க. ஞாபகம் இல்ல...'' என்றாள் சேதுவை நேராய்ப் பார்த்து.

''கல்யாண அமளி... அதான்....'' என்று இவனிடம் சொல்லி விட்டு, ''நம்ம ஜனங்க எல்லாம் வீடியோவுக்கு போஸ் குடுக்கத்தான் வந்துச்சு, பல்லைக் காட்டிகிட்டு. இவன் ஒருத்தன் வண்டி வண்டியாப் பக்கத்துத் தெருவுல இருந்து தண்ணி கொண்டு வரலயின்னா அன்னிக்கி சாப்பாட்டுப் பந்தி நாறியிருக்கும்...''

''அப்பா சொன்னாங்க... இவங்க தானா அது...''

''அதான்... இவன்தான்...''

சேதுவுக்கு இன்னும் ரெண்டு வண்டி கூட அடித்திருக்கலாமோ என தோன்றியது.

''எப்ப வந்த நீ...'' என்றான் சேது. ரொம்ப 'லே'ட்டாய்.

''நேத்தே வந்தாச்சி... நீ வருவே யின்னு பார்த்தேன். காணோம். அம்மா சௌக்கியமா?''

யாரோ கூட்டமாய் வந்தார்கள். 'போயிட்டு வரேன்... டாடா...' விதவிதமாய் சப்தங்கள்.

ஓரமாய் நாற்காலி போட்டு உட்கார்ந்திருந்த சேதுவுக்கு போரடித்தது.

கொஞ்ச நேரத்தில் விஜயன் வந்து, ''சியாமளா நல்லா வீணை வாசிப்பா... தெரியுமா உனக்கு... சியாமளா!'' என கூப்பிட்டான்.

அவள் வந்தாள்.

''வா மேலே போலாம்...''

நேராய்ச் சேதுவின் அறைக்கு அழைத்துச் சென்றான். வெளியே 'சேது இல்லம்' என்று பத்தாம் வகுப்புப் படிக்கும் போது பச்சை 'ஸ்கெட்ச்' பேனாவால் எழுதியிருந்தது இன்னும் இருந்தது. கொஞ்சம் சாயம் போய் இருந்தது.

''உள்ளே வா... சேதுவுக்குக் கொஞ்சம் வீணை வாசிக்கக் காட்டு...'' என்றான் விஜயன்.

அறை துப்புரவாக இருந்தது. கொடியில் இருந்த அவன் துணிகள் இல்லை. மூலையில் 'ஆஷ்ட்ரே' எனப்படும் பழைய பௌடர் டப்பாவைக் காணவில்லை. புதிதாக 'மணக்குள விநாயகர் துணை' என்ற போர்டும், அதன் ஒருபுறம் ஊதுவத்தி ஒன்று எரிந்து கொண்டும் இருந்தது. கட்டில் அகற்றப்பட்டிருந்தது.

சேதுவுக்கு மெல்ல புரிய ஆரம்பித்தது.

''சியாமளாவுக்கு வீணை 'பிராக்டிஸுக்'குன்னு தனியா அமைதியா 'ரூம்' வேணும்னு சொன்னா. உன் 'ரூம்'தான் சரின்னு பட்டுக்க. 'ப்ரைவஸி'யாவும் இருக்கும். நல்ல காத்தோட்டமாவும் இருக்கும்...''

சேது மௌனமாய் இருந்தான்.

''நீ ஒண்ணும் சொல்ல மாட்டேன்னு சொல்லிட்டேன். இனி உனக்கு இந்த ரூம் வேணுமா என்ன? வேணுமானா என் ரூம்ல...''

சேது ஜன்னலைத் திறந்தான். 'ஹோ'வென தூங்குமூஞ்சி மரம். ரோஸ் கலரில் பூக்கள்.

''என்ன சியாமளா... வாசிக்கக் காண்பி. அவன் எங்கேயோ வேடிக்கை பார்க்கிறான்...''

சேது எதுவுமே சொல்லி விடக் கூடாது என்ற அவன் தீவிரம் தெரிந்தது. சேது உள்ளுக்குள் நிலைகுலைந்து போயிருந்தான்.

சியாமளா வீணையைத் தூக்கி மடியில் கொஞ்ச நேரம் வைத்திருந்து விட்டு, ''ஸாரிங்க... 'மூட்' இல்ல... காப்பி போடணும்'' என்று போய் விட்டாள்.

''விஜி! ஒரு 'பேக்' இருக்கா?'' என்றான் சேது.

''ஏண்டா?''

''என் துணியெல்லாம் எடுத்திட்டுப் போகணும்...''

மௌனமாய் ஒரு பையைக் கொண்டு வந்து கொடுத்து விட்டு, ''நீ தப்பா நினைக்கக்க மாட்டேன்னு எனக்குத் தெரியும்'' என்றான் விஜயன். அசந்தர்ப்பமாய்ச் சிரித்தான்.

சேது மீண்டும் ஜன்னலோரம் வந்தான். அசையாமல் தூங்குமூஞ்சி மரம் நின்று கொண்டிருந்தது. துளிக்கூட அதனில் சலனம் இல்லை. எப்போதும் போலவே.

''நான் கிளம்பறேன்'' என்றான்.

வீட்டை விட்டு வெளியே வந்த போது, சேதுராமனுக்கு அம்மா ஞாபகம் வந்தது.

---

''என்னமோ தெரியலை, குப்புசாமி நேத்திக்கு ஆறரை மணி வரைக்கும் ஆபீஸில் அசந்து தூங்கிட்டார்!''

''ஆச்சரியமாயிருக்கே! வழக்கமா அவர் ஓ.டி. பண்ண ஒத்துக்க மாட்டாரே!''

- ரமேஷ்



விஷ்வக்சேனன்

# பாண்டியன் மகள்

## 14. மார்க்கியன்

மேலைக் கடலிலிருந்து காற்று எப்போதும் போல மூர்க்கமாக வீசிக் கொண்டிருந்தது. காற்றில் அலைபாய்ந்த குழல்களையோ கலைந்து கிடந்த ஆடைகளையோ அஞ்சனாதேவி கவனித்ததாகத் தெரியவில்லை. நீலக்கடலை உற்று நோக்கியபடி, கப்பலின் சாளரத்தினருகே நின்றிருந்த அஞ்சனாதேவியின் அழகிய முகம், பெரும் சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தது. சற்று நேரத்திற்கொருமுறை, மடிந்து விரிந்த இதழ்கள் சிவந்து பளபளத்தன. கை விரல்கள் கழுத்தில் புரண்ட பெரும் முத்துக்களை நெருடி, விஷமம் செய்து கொண்டிருந்தன.

ஈழத்து மன்னனின் இரண்டாவது மகளாகப் பிறந்து வளர்ந்தாலும், பிறந்த மண்ணில் அரண்மனையின் சுகபோகங்களை அனுபவித்துக் கொண்டு நிம்மதியாக இருப்பதை விடுத்து, அரசியல் சதுரங்கத்தில், தான் ஒரு பகடைக் காயாக பயன்படுத்தப்படுவதை எண்ணிய அவள், தன் மீதே எழுந்த பச்சாதாபத்தினால் உருகி, தன்னை மறந்து, சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். ஈழ மன்னனுக்குத் தமிழகத்தின் மீது ஏற்பட்ட ஆசையால் பாண்டியனுக்குத் தன்னை மணமுடிக்கவும், அதன் மூலம் ஈழத்து ஆதிக்கத்தைத் தமிழ் மண்ணில் ஏற்படுத்தவும் மன்னன் தீர்மானித்ததால், தான் அவதிப்பட வேண்டியிருப்பதை எண்ணினாள்.

ஈழத்து அரண்மனையில் நிம்மதியாகக் காலம் கழிக்கும் தன் சகோதரியை நினைத்துப் பெருமூச்சு விட்டாள். "அவளைப் போல அங்கேயே தனக்கு ஒரு சிற்றரசன் கிடைக்காமலா போயிருப்பான்? இந்தப் பாண்டிய இளவல் மாறவர்மனைக் கண்டாலே பிடிக்கவில்லை அவளுக்கு. அவனுடைய சலனப்பட்ட பார்வையும், அளவுக்கு மீறிய குழைவும் எரிச்சலையே ஊட்டின. ஆண் மகனுக்குரிய கம்பீரமோ, வீரனுக்குரிய பார்வையோ அற்ற அவனுக்குப் பட்ட மகிஷியாகத் தன்னால் வாழ்நாள் முழுதும் காலந்தள்ள இயலுமா என்ற சந்தேகம், பெரும் கேள்விக்குறியாகத் தோன்றியது. இந்த அழகில், அவன் சோழ இளவரசி அம்மங்காவை வேறு அபகரிக்கப் பார்த்தானாம். தோளில் விழுந்த வாள் வெட்டுடன் அவளையும் கோட்டை விட்டு விட்டான். தோளில் விழுந்த வெட்டு, கழுத்தில் விழுந்திருக்கக் கூடாதா? விழுந்திருந்தால் தனக்கு இந்தச் சங்கடம் ஏற்பட்டிருக்காதே!

யார் அந்த வீரன்? மாறவர்மனையும் உடனிருந்த வீரர்களையும் வென்று, தனியாகவே இளவரசியை மீட்டுச் சென்றான் என்றால், அவன் சாமானிய வீரனாக இருக்க முடியாது. அந்த வீரனின் பெயர் என்ன சொன்னார்கள்? அரையன் ராஜராஜன்... இல்லையில்லை... அரையன் மதுராந்தகன். ஆம். அதுதான் அவன் பெயர்...

அவள் சிந்தனை ஓட்டம் பின்னால் ஒலித்த குரலால் தடைப்பட்டு நின்றது. "ஈழத்து இளவரசி பெரும் சிந்தனையிலிருப்பதாகத் தெரிகிறது."

திரும்பிய அஞ்சனாவின் எதிரில் தண்டநாயகனுடன் சமுத்திரபந்தனும் முறுவலுடன் நின்றிருந்தான்.

அஞ்சனாவின் இதழ்களில் ஒரு சோகப் புன்னகை மலர்ந்தது.

"எனது பரிதாப நிலையை எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தேன்" என்ற பதிலும் வந்தது அவளிடமிருந்து.

"இளவரசியின் நிலைக்கென்ன? பாண்டிய அரியணை அவருக்காகக் காத்துக் கிடக்கிறது. தண்டநாயகரின் பலமான கரம் பாதுகாவலுக்கு நிற்கிறது" என்றான் சமுத்திரபந்தன்.

"பாண்டிய அரியணைக்குப் போட்டியாக அதன் உண்மை வாரிசு ஒருத்தி இருப்பதாகக் கூறினீர்களே!"

"ஆம். அது உண்மைதான். ஆனால் அவள் எங்கிருக்கிறாள் என்பதோ அவளை யார் பாதுகாக்கிறார்கள் என்பதோ தெரியவில்லையே!" என்ற சமுத்திரபந்தன், "ஆனால் தகுந்த அத்தாட்சிகளுடன் ஒருவர் காஞ்சியில் தகுந்த சந்தர்ப்பத்துக்காகக் காத்திருக்கிறார் என்பது மட்டும் தெரியும்" என்றான்.




''யார் அவர்?'' தண்டநாயகன் குரல் கரகரப்புடன் ஒலித்தது.

''கவிநாராயணபட்டர்'' என்ற சமுத்திரபந்தனின் பதில், தண்டநாயகன் முகத்திலும் ஆயாசமும் அவநம்பிக்கையும் தோன்ற வைத்தது.

''அவரா! அவரை நெருங்கக் காலன் கூடத் தயங்குவானே'' என்ற தண்டநாயகன் முகத்தில் சோர்வு நிலவியது.

''இந்தச் செய்தி பாண்டியருக்குத் தெரியுமா?'' என்றும் வினவினான் தண்டநாயகன்.

''இங்கு வருமுன் அவர்களிடம் இது பற்றிப் பேசி விட்டுத்தான் வந்தேன். மாறவர்மர் எப்படியும் அவளைக் கண்டுபிடித்து அழித்து விடுவதாகக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்.''

நீண்ட நேரம் சிந்தனை வசப்பட்ட தண்டநாயகன் வீரபாகு, ''எதற்கும் நான் மார்க்கியனை வரவழைக்கிறேன். மாறவர்மருக்கு அவன் பெரும் உதவியாக இருப்பான்'' என்றான்.

அஞ்சனாதேவியின் அழகிய சிவந்த முகம் வெளிறிப் போனது. பெரும் பீதி அவள் விழிகளில் பரவியதைக் கண்ட சமுத்திரபந்தன் வினவினான் : ''யார் இந்த மார்க்கியன்?''

பதில் தண்டநாயகனிடமிருந்து வந்தது :

''மார்க்கியன் எனது உபதலைவன். ஈழத்து மன்னருக்கு எதிராகச் செயல்பட எண்ணுபவர்களை மாய்ப்பதற்கென்றே பிரத்யேகமாகப் பயிற்சி அளிக்கப்பட்டு நியமிக்கப்பட்டவன். பாண்டியன் மகளைத் தேடி அவளை அழிக்கும் பணிக்கு அவனைத்தான் அனுப்ப எண்ணியிருக்கிறேன்.''

அஞ்சனாதேவியின் மனம், முகம் தெரியாத அந்தப் பாண்டியன் மகளை எண்ணி அனுதாபப்பட்டது. தாய் தந்தையரை இழந்து, எங்கோ அனாதை போல வளர்ந்திருக்கும் பாண்டியன் மகளது உயிருக்கும் இப்போது ஆபத்து நெருங்குவதை உணர்ந்து கொண்ட அஞ்சனாதேவி, ''அரச குலத்தில் பெண்ணாகப் பிறப்பதே பாவம்'' என்று முணுமுணுத்துக் கொண்டாள்.

சமுத்திரபந்தனது விழிகளில் ஒரு விபரீத ஒளி படர்ந்தது. அவன் உதடுகள் ''மார்க்கீயன்'' என்று அந்த கொலைஞனின் பெயரை ஒருமுறை உச்சரித்தன. அவனையுமறியாது அவனது வலதுகரம் இடையில் தொங்கிய அந்த பட்டையான யவன வாளின் பிடியில் சென்று அமர்ந்தது.

கண நேரத்தில் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு, சகஜ நிலைக்குத் திரும்பி விட்ட சமுத்திரபந்தன் எழுந்தான்.

''தண்ட நாயகரே, உங்கள் முயற்சி வெற்றி பெறட்டும். நான் வேங்கி நாட்டிற்குக் கிளம்ப வேண்டும். நீண்ட பயணம் காத்திருக்கிறது. விடைபெற்றுக் கொள்கிறேன்'' என்ற சமுத்திரபந்தன் கலத்திலிருந்து படகு ஒன்றில் இறங்கி, தானே துடுப்புகளை இயக்கி, கரையை நோக்கிச் சென்று, அவர்கள் பார்வையிலிருந்து மறைந்தான்.

'' 'வந்தே மாதரம்'னு உனக்குப் பேர் வச்சிருக்காங்களேடி, நீ என்ன, சுதந்திர தினத்தன்னிக்குப் பிறந்தியா?''

''இல்லேடி! காலையில் ரேடியோ ஸ்டேஷன் திறக்கும் போது பிறந்தேனாம்!''

- திருமதி முத்துக்கண்ணு



உறையூர் அரண்மனை நந்தவனத்துப் பூக்கள் பரப்பிய நறுமணம், அந்த மாலைப் பொழுதில் அந்தப் பகுதியையே மயக்கிக் கொண்டிருந்தது. மழைக் காலம் முடிந்து, பனி கவியத் தொடங்கி விட்டதால், மாலை சற்று மங்கியதுமே குளிர் நன்றாகப் பரவி விட்டிருந்தது. குளிரை அதிகப்படுத்தி வீசிய காற்றில் மலர்ச் செடிகள் நட்சத்திரங்களாகப் பூத்துக் கண்களைக் கவர்ந்து இருந்தன. இந்த அழகிய சூழ்நிலையைக் கவனியாமல், செதுக்கிய சிலை போல அந்த அரண்மனையின் நந்தவனத்துப் புல் தரையில் அமர்ந்திருந்தாள், நடந்து போன சம்பவங்களில் மனதைப் பறிகொடுத்து விட்ட கார்குழலி.

ஜடாவர்ம பாண்டியனின் மகளாகப் பிறந்து, சிறுமியாக இருந்தபோதே தாய் தந்தையரையும் பிறந்த மண்ணையும் பிரிந்து, யாரோ ஒரு கோட்டைத் தலைவனால் எடுத்துச் செல்லப்பட்டு, எங்கோ ஒரு மலைப் பகுதியில், வித்தியாசமான சூழ்நிலையில் வளர்க்கப்பட நேர்ந்த தன் விதியை எண்ணி வருந்துவதா, அல்லது கோட்டைத் தலைவன் தன் மீது காட்டிய அன்பையும் பரிவையும், ஊட்டிய கல்வியையும் எண்ணி மகிழ்வதா என்பது அவளுக்குப் புரியவில்லை. கோட்டைத் தலைவன் இறந்த பின், தன்னைக் கொல்ல முயன்று, மலைப் பாதையில் ஜெயந்தன் குறுவாளுக்குப் பலியான உபதலைவன் மீது இப்போது பரிதாபமே பிறந்தது அவளுக்கு.

எங்கிருந்தோ ஒரு வாலிபன் திடீரென்று தோன்றி, தான் பாண்டிய இளவரசியென்று அறிவித்ததையும், அந்த அபாயகரமான கோட்டையிலிருந்து தன்னை மீட்டதையும் எண்ணினாள் அவள்.

காஞ்சியின் பிரம்மாண்டமான அரண்மனையிலும் திருநாராயணபட்டரின் இல்லத்திலும் அவளுக்கு அதுவரை அனுபவித்தறியாத அன்பும், பாசமும் மரியாதையும் கிடைத்தன. தாயின் அன்பு மழையிலும், பட்டரின் பரிவிலும் திக்குமுக்காடினாள் அவள். அவளது புத்தி கூர்மையையும், அறிவையும் கண்டு வியந்த பட்டர், அவளுக்கு மேலும் பல கலைகளைக் கற்பிக்க முற்பட்டார். ஆனால் அதற்குள் ஒரு திருப்பம் ஏற்பட்டு விட்டது. அவள் காஞ்சிக்கு வந்து சேர்ந்த இரண்டாவது நாள் அங்கே வந்து சேர்ந்த அம்மங்கைதேவிக்குக் கார்குழலியைக் கண்டதும் தனக்கிணையான தோழி கிடைத்து விட்டதாகத் தோன்றியது. பட்டரிடம் வாதாடி வெற்றி பெற்றவள், அவளையும் மங்கையர்க்கரசியையும் உறையூர் அரண்மனைக்கு அழைத்து வந்து விட்டாள். பாடலிலும் ஆடலிலும் அவளை ஒரு திங்களுக்குள் தேர்ந்தவளாக்கி விடக் கங்கணம் கட்டிக் கொண்டவள் போல அவளை ஒரு நாழிகை நேரங்கூட விட்டுப் பிரியாமலிருந்தாள். இயற்கையாகவே கார்குழலிக்கிருந்த இனிய குரலைப் பதப்படுத்தி, யாழுடன் சேர்ந்து, இசையுடன் பாட அவளைப் பழக்கப்படுத்தி விட்டாள் அம்மங்கை.

இன்றிரவும் அரண்மனையின் மேன் மாடத்திலிருந்து இனிய இசை தவழ்ந்து வரலாயிற்று. நந்தவனத்திலிருந்து கார்குழலி திரும்பிய சற்று நேரத்துக்கெல்லாம் மங்கையர்க்கரசியும், புவனமாதேவியும் சற்றுத் தள்ளி அமர்ந்திருக்க, அம்மங்கையின் யாழுடன் இணைந்து கார்குழலியின் இனிய குரல் ஒலிக்க ஆரம்பித்தது. அம்மங்கை கற்றுத் தந்த பாடல்தான் அது. அவள் பாடக் கேட்ட

## அருள்வாக்கு

மனிதனாகப் பிறந்தவனுக்கு எவ்வளவோ பாக்கியங்கள் உண்டு. எல்லா பாக்கியங்களுள்ளும் மேலான பாக்கியம் பிறருக்குச் சேவை செய்வதே.

'சேவை' என்று தெரியாமலே அவரவரும் தமது குடும்பத்துக்காகச் சேவை செய்கிறோம். அதோடு நமக்குச் சம்பந்தமில்லாத குடும்பத்துக்கு, ஊருக்கு, நாட்டுக்கு, சர்வ தேசத்துக்கும் நம்மால் முடிந்த சேவையைச் செய்ய வேண்டும் என்கிறேன். நமக்கு எத்தனையோ கஷ்டங்கள், உத்தியோகத்தில் தொந்தரவு, சாப்பாட்டுக்கு அவஸ்தை, வீட்டுக் கவலை - இத்யாதி இருக்கின்றன. நம் சொந்தக் கஷ்டத்துக்கு நடுவில் சமூக சேவை வேறா என்று எண்ணக் கூடாது. உலகத்துக்குச் சேவை செய்வதாலேயே சொந்தக் கஷ்டத்தை மறக்க வழி உண்டாகும். அதோடு கூட 'அசலார் குழந்தைக்குப் பாலூட்டினால், தன் குழந்தை தானே வளரும்' என்றபடி நம்முடைய பரோபகாரத்தின் பலனாக பகவான் நிச்சயமாக நம்மைச் சொந்தக் கஷ்டத்திலிருந்து கைதூக்கி விடுவான். ஆனால் இப்படி ஒரு லாப நஷ்ட வியாபாரமாக நினைக்காமலே பிறர் கஷ்டத்தைத் தீர்க்க நம்மாலானதைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பித்து விட்டால் போதும். அதனால் பிறத்தியான் பெறுகிற பலன் ஒரு பக்கம் இருக்கட்டும், நமக்கே ஒரு சித்த சுத்தியும், ஆத்ம திருப்தியும் சந்தோஷமும் ஏற்பட்டு அந்த வழியில் மேலும் மேலும் செல்வோம்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

புவனமகாதேவியும், மங்கையர்க்கரசியும், இசையறிவையூட்டிய அம்மங்கையைப் பாராட்டுவதா, இல்லை ஏற்கெனவே அமைந்த இனிய குரலைப் பக்குவப்படுத்திக் கொண்ட கார்குழலியைப் பாராட்டுவதா என்று புரியாமல் திகைத்தனர்.

அச் சமயம் அரண்மனை வாயிலில் புரவியில் வந்திறங்கிய விக்கிரமன், இசை தந்த இனிய மயக்கத்தில் தன் தாயும் தங்கையும் ஆழ்ந்திருப்பதை அறிந்தவனாக, அதைக் கெடுக்க விரும்பாமல் அமைதியாகவே உள்ளே நுழைந்தான். அந்த அற்புத இசையைக் கேட்டு அவனும் கூடத்தின் நடுவில் சிலையாகி நின்றான். பின் தன் காலடிச் சத்தம் கூடக் கேட்காதபடி மெல்ல மேன் மாடத்தை நோக்கிப் படிகளில் ஏறினான். நிலா முற்றத்தின் நடுவிலிருந்த மேடை மீது அமர்ந்து பாடிய கார்குழலியையும் அருகிலமர்ந்து யாழை மீட்டிய அம்மங்கையையும் கண்டவன், தான் உள்ளே பிரவேசிப்பதால் அந்த இனிய இசை தடைப்படும் என்று உணர்ந்ததால் வாயிலிலேயே நின்று ரசிக்கத் தொடங்கினான்.

கண்களை மூடியபடி இசையில் லயித்துத் தன்னை மறந்து பாடிக் கொண்டிருந்த கார்குழலி, இடையே சற்று லேசாக விழிகளைத் திறந்த போது, வாயிலில் நின்று கொண்டு தன்னைக் கண் கொட்டாது பார்த்தவாறு பாடலை ரசித்த விக்கிரமனைக் கண்டு விட்டாள். பாடுவதைச் சட்டென்று நிறுத்தியவள், விருட்டென்று எழுந்து முகம் சிவக்க ஓடிச் சென்று புவனமகாதேவியின் பின் மறைந்து கொண்டாள்.

எதிரிலிருந்த ஆசனத்தில் வந்து அமர்ந்த விக்கிரமனின் விழிகளில் விஷமச் சிரிப்பு ஒன்று மலர்ந்திருந்தது.

மங்கையர்க்கரசி விக்கிரமனைக் கண்டதும் எழுந்து கொள்ளச் செய்த முயற்சி, அவள் தோளைப் பற்றி அழுத்திய புவனமகாதேவியின் கரத்தால் பயனற்றுப் போனது.

''நல்ல இசையை நான் மட்டும் கேட்கக் கூடாதவனாகி விட்டேனா?'' விக்கிரமனிடமிருந்து கேள்வி ஒன்று எழுந்து, கார்குழலியின் சிவந்த முகத்தை குங்குமச் சிவப்பாக மாற்றியது.

புவனமகாதேவியின் பார்வை கார்குழலியை அலசியது. அவள் முகத்தில் மந்தகாசமொன்றும் மலர்ந்தது.

''நான் வேண்டுமானால் சென்று விடுகிறேன். பாடல் தொடரட்டும்'' என்றபடியே எழுந்தான் விக்கிரமன்.

குனிந்திருந்த கார்குழலியின் முகம் லேசாகப் பக்கவாட்டில் திரும்பி கடைக் கண்ணின் ஓரப் பார்வை ஒன்று விக்கிரமனை நோக்கிப் பாய்ந்தது.

அதில் தெரிந்த கெஞ்சலையும் விழி ஓரத்தில் நீர் துளிர்க்கத் தொடங்கியிருந்ததையும் கண்ட விக்கிரமன், காந்தத்தால் கவரப்பட்டவன் போல நின்றான்.

''பாவம், அவளைப் பரிகாசம் செய்யாதே அண்ணா'' - அம்மங்கை பரிவுடன் கூறி கார்குழலியின் அருகில் சென்று அமர்ந்து, அவளை லேசாக அணைத்துக் கொண்டாள்.

''மதுராந்தகனிடமிருந்து செய்தி ஏதேனும் வந்ததா?'' என்று வினவினாள் புவனமகாதேவி.

விக்கிரமனின் பார்வை கார்குழலியின் மீதிருந்து அகன்று தாயின் முகத்தில் பதிந்தது.

''இல்லையம்மா, பல்லவராயருக்கு மட்டும் ஒரு ஓலை வந்திருப்பதாக அறிந்தேன்'' என்றான் விக்கிரமன், இலேசான தடுமாற்றத்துடன். அதனைப் புவனமகாதேவி கவனிக்கவில்லை. அவன் வலது கரம் கச்சையினுள் மறைந்திருந்த ஓலைகளைத் தடவியது. அங்கு அவனுக்கு அரையனால் எழுதப்பட்ட ஓலை - கார்குழலிக்கு வரப்போகும் ஆபத்தைக் கூறும் ஓலை - மறைந்திருந்தது. வீணாக அவர்களைக் கலவரப்படுத்த அவன் விரும்பவில்லை.



''உங்க பையன் தேறிட்டான் ஸார்; அவன் எதிர்காலத்தைப் பற்றி உங்களுக்குக் கவலையே வேண்டாம்!''
''எப்படிச் சொல்றீங்க?''
'' 'வாழ்க்கையில பணக்காரனாக உயர என்ன செய்யணும்?'னு கேட்டா 'நிறைய்ய மாமூல் வாங்கணும்'ங்கறான்!''

- ஜெயஸ்ரீராஜ்

''அண்ணா!''

''என்ன தங்காய்?''

''ஒரு வேண்டுகோள்.''

விக்கிரமன் விழிகளில் வியப்பு தோன்றியது. ''உனக்கு ஆணையிட்டுத்தானே வழக்கம்'' என்றான்.

''வேண்டுகோள் எனக்கல்ல. கார்குழலிக்கு!''

''என்ன வேண்டும்?'' விக்கிரமனின் குரல் கனிந்திருந்தது.

''அவள் ஒருமுறை மதுரைக்குச் சென்று பழைய அரண்மனையைக் காண்பதுடன் மீனாட்சி சுந்தரேஸ்வரரையும் தரிசித்து வர வேண்டுமாம்.''

மங்கையர்க்கரசியின் முகம் வெளுத்தது. தானும் கார்குழலியும் உயிருடன் இருப்பதைப் பாண்டிய தாயாதிகள் அறிவது தங்களுக்குப் பெரும் அபாயம் என்பதை உணர்ந்த அவள் மனம் நடுங்கியது.

விக்கிரமன் முகமும் சற்று சிந்தனையில் ஆழ்ந்தது. அவன் வலது கரம் இடையிலிருந்த அரையனது ஓலையை மீண்டும் நெருடியது. முதன் முதலாகக் கார்குழலி விடுத்த வேண்டுகோளைத் தட்டவும் அவன் மனம் இடந்தரவில்லை.

''என்ன அண்ணா? என்ன யோசிக்கிறாய்?'' அம்மங்கையின் குரல் பொறுமை இழந்து ஒலித்தது.

''சரி. நான்கு தினங்கள் கழித்து அழைத்துச் செல்கிறேன். சில முன் ஏற்பாடுகள் செய்ய வேண்டும்'' என்றான் விக்கிரமன்.

தோழிகள் இருவருடைய முகங்களும் மலர்ந்தன. மங்கையர்க்கரசி முகத்திலோ அச்சமும் குழப்பமும் படர்ந்தன. அதைக் கவனித்தக் கார்குழலி, ''மதுரைக்குச் செல்வதில் ஆபத்து ஏற்படும் எனில் வேண்டாம் அம்மா! நான் அறியாமல் கேட்டுவிட்டேன். மன்னித்து விடுங்கள்'' என்றாள்.

புவனமகாதேவியின் குரல் கம்பீரமாகவும் தெளிவாகவும் ஒலித்தது.

''ஆபத்தைக் கண்டு அஞ்சுவதென்பது என்றைக்கும் சோழ வம்சத்தில் இருந்ததில்லை கார்குழலி'' என்றவள், ''விக்கிரமா, நீ சென்று தகுந்த ஏற்பாடுகளைச் செய்'' என்று உத்தரவிட்டாள்.

**பா**ர்வைக்கு பிரும்மாண்டமாக நின்றிருந்த அந்தக் கலத்தின் உச்சியில் பறந்த கொடியில் பொறிக்கப்பட்டிருந்த யாளிச் சின்னம், கொல்லத்தையே விழுங்க வருவது போல் வாயைப் பிளந்து கொண்டு படபடத்தது.

மணலில் காலைப் பரப்பி உறுதியாக ஊன்றி நின்று, அந்தக் கலத்தையும் அதிலிருந்து படகுகளில் இறங்கிக் கரையை நோக்கி வந்து கொண்டிருந்த வீரர்களையும் கவனித்தபடி நின்றிருந்தான், ஈழத்துத் தண்டநாயகன் வீரபாகு.

படகுகள் கரையை அடைந்ததும் அவன் எதிரே அணிவகுத்து நின்றனர் ஈழத்து வீரர்கள். வீரபாகுவின் விழிகளோ அந்த வீரர்களைத் தவிர்த்துக் கடைசியாக வந்து கொண்டிருந்த படகின் மீது நிலைத்து நின்றன.

அவன் முகத்தில் பெரும் திருப்தி நிலவியது. அவன் உதடுகள் பிரிந்து ''மார்க்கியன்'' என்று உச்சரித்தன.

(தொடரும்)



# கந்து வட்டிக்குப் பேர்பெற்ற தர்மபுரி!

"காலையில் பத்து ரூபாய் கொடுத்தால், மாலையில் இருபது ரூபாயாகத் திரும்பக் கிடைக்கும் 'கந்து வட்டி'தான் இங்கே முக்கிய தொழில். அப்புறம் சிறுதொழில்களோ, பெரிய தொழில்களோ நடத்தி எவன் நஷ்டப்படத் தயாராய் இருக்கிறான்?'' என்று சுருக்கென பதில் கிடைத்தால், யோசிக்கவே தேவையில்லை, நீங்கள் இருக்கும் இடம் தர்மபுரிதான்.

தர்மபுரி மாவட்ட அ.இ.அ.தி.மு.க. துணைச் செயலாளர் மாதையா கிருஷ்ணன் ஒரு 'தேவை-பட்டிய'லே கொடுத்தார் :

''இங்கே பாலிடெக்னிக் தேவை. பெண்கள் கல்லூரி தேவை. பூங்கா தேவை. எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச் தேவை. கலெக்டர் ஆபீஸ், முனிசிபல் எல்லைக்குள் தேவை. ஹொகேனகல் குடிநீர்த் திட்டம் தேவை. சிறு தொழில்கள் தேவை. ஹோட்டல் தேவை!''

முதல் இரண்டு ஐட்டங்கள் மிக மிக அவசியம், என்பதை வலியுறுத்தத் தேவை இல்லை. அதிலும் 4000 பெண்கள் பயிலும் பள்ளிக்கூடம் இருக்கையில், மேற்கொண்டு கல்வியைத் தொடர ஒரு கல்லூரி கூட இல்லாவிட்டால் எப்படி?

ஆனால் படித்து, ஊர் விட்டு ஊர் வந்து வேலை பார்க்கும் பெண்கள், தர்மபுரியைப் பொறுத்த மட்டில் கொடுத்து வைத்தவர்கள். ''குறைந்தபட்ச, அதாவது ரூ 400 செலவில் தங்குவதற்கு ஹாஸ்டல் வசதி தருகிறது தர்மபுரி மாதர் சங்கம்'' என்கிறார் தலைவி காளியம்மாள். ''தையல் பயிற்சி, முதியோர் இல்லம், குழந்தைகளைப் பார்த்துக் கொள்ள இலவச 'க்ரெஷ்', குடும்பப் பிரச்னைகளைத் தீர்த்து வைக்க ஆலோசனை மையம் என்று எங்கள் மாதர் சங்கம் இருபது வருடங்களுக்கு மேலாகப் பணியாற்றி வருகிறது!'' என்கிறார் காளியம்மாள். இவர் தலைமைப் பொறுப்பு ஏற்றிருக்கும் இன்னோர் அமைப்பு, விவேகானந்தா அறக்கட்டளை. (தர்மபுரி எம்.எல்.ஏ. பொன்னுசாமி இதன் செயலர்.) கிராமங்களில் நூலகம், தொழில்கள் தொடங்க உதவி, மலைவாழ் மக்களுக்கு வருவாய்த் திட்டம் என்று நிறைய குறிக்கோள்கள். அரசே செய்ய வேண்டும் என்று காத்திராமல் அமைப்புகள் இப்படிச் செயல்பட்டால், அரசு கையைக் கட்டிக் கொண்டு வேடிக்கை பார்க்காமல் உதவிக் கரம் நீட்ட வேண்டியது அவசியம்.

ஆனால் அப்படியொன்றும் நடப்பதில்லை என்று, சலவைத் தொழிலாளி கே. ஹரியைச் சந்தித்த போது கொஞ்சம் (கொஞ்சம் என்ன, நிறையவே) வருத்தமாக உணர்ந்தோம். ''அதிகாலையில் எழுந்து, ஆறு கிலோ மீட்டர் தூரம் நடந்து, பழிஹாலப்பள்ளம் என்னும் இடத்தில்



● ராஜாஜிகோபால் பூங்கா : பூங்காவா இது?

போய்த் துணிகளைத் துவைத் துக் கொண்டு வருகிறோம். துணிகளை உலரப் போட வசதி இல்லை. தோபிகானா வுக்கு, பச்சையம்மன் கோயில் அருகே இடம் ஒதுக்கினார் கள். மூன்று லட்ச ரூபாய் எஸ்டிமேட். '5000 ரூபாய் கட் டுங்கள் முதலில்; மீதி கவர்ன் மெண்ட் போடும்' என்று முனிசிபாலிடிகாரர்கள் சொன் னார்கள். இப்போது கேட் டால், ஸ்கீம் நின்று போய் விட்டது பணம் கட்டாதே என் கிறார்கள். மாதம் தவறாமல் விண்ணப்பம் போடுகிறோம். 150 குடும்பங்கள் இந்தப் பிழைப்பை நம்பித்தான் இருக் கிறோம்!'' என்றார் ஹரி. ''காலங் காலமாக, நாங்கள் துணி காய வைப்பதற்கென்றே 77 சென்ட் நிலம் இருக்கிறது. அதையும் ஒருவன் ஆக்கிர மித்துக் கொண்டு ராவடி பண்ணுகிறான். நாங்கள் யாரா வது அங்கே போனாலே, புத்திசாலித்தனமாக அவன் வீட்டுப் பெண்களை அனுப்பி வைத்து, அவர்களே தங்கள் புடவை ஜாக்கெட்டைக் கிழித் துக் கொண்டு, 'என்னை இவர் கள் பலாத்காரம் செய்கிறார்கள்!' என்று பொய் வழக்குப் போடுகிறான்!'' என்று தங்கள் சோகக் கதையைக் கூறினார் ஹரி.

மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த இந்தக் குடும்பங்களின் சோகக் கதைக்கு அரசு ஒரு முற்றுப்புள்ளி வைத் தால் ஒழிய, விவகாரம் விகாரமாகத்தான் போகும்!

* ஹரி ஹர சுவாமி கோவில் தெரு : ''தெருவா? குப்பைமேடா?''

ஆனால், ''பெரிய அளவில் ரௌடித் தனம், கொலை, கொள்ளை எதுவும் கிடையாது!'' என்கிறார் மாவட்டக் காவல் துறைத் தலைவர் ராமானுஜம். ''எல்லாம் சின்னச் சின்னக் குற்றங்கள்தான். 14, 15 வயதுப் பையன்கள் வெறும் 'த்ரில்'லுக் காக தொடர் திருட்டுக்களில் ஈடுபட்டு மாட்டிக் கொண்டார்கள்...''

''ராஜகோபால் பூங்கா பாழடைந்து போனது போல் இருக்கிறது. கஞ்சா இங்கே தாராளமாய்ப் பயன்படுத்துவதாகக் கேள் விப்பட்டோம்...?''

''ரெகுலர் சுற்றுகள் போகிறோம். நடவடிக்கை எடுத்து வருகிறோம். பயப்பட வேண்டாம், பெரிய அளவில்

மாதையா கிருஷ்ணன் : ...டியிலே போடுகிறார்!

* டாக்டர் சரஸ்வதி நாதன்

* ஹரி : ''எங்க சோகக் கதை யைக் கேளுங்க!''

* காளியம்மாள்

எதுவும் நடக்கவில்லை!'' என்கிறார் எஸ்.பி.

குறைகள் அதிகம் இல்லை என்பதாலேயே, இருக்கிறவற்றை அலட்சியப்படுத்த வேண்டாமே என்பதுதான் தருமபுரி நகரை ஒட்டியுள்ள விருமாட்சிபுரம், தமிழ்நாடு வீட்டு வசதி வாரியக் குடியிருப்பில் வசிக்கும் பிரபாகரனின் வேண்டுகோள். ''400 வீடுகள் இருக்கிற காலனி இது. குடிநீர்ப் பிரச்னைதான் பெரியது. ஒருநாள் விட்டு ஒருநாள்தான் கிடைக்கும். தர்மபுரிக்கு வழங்கப்படும் பஞ்சப்பள்ளி நீரையே எங்களுக்கும் வழங்கினால் பிரச்னைக்குத் தீர்வு காணலாம்'' என்கிறார் பிரபாகரன்.

அதே போல்தான் ஹரிஹரநாதசுவாமி கோவில் தெரு பிரச்னையும். ஆங்காங்கே குப்பைகள் கொட்டப்பட்டுப் பன்றிகள் கொட்டமடிக்கின்றன. ''எத்தனையோ முறை, முறையிட்டு விட்டோம். பலன்தான் இல்லை!'' என்கின்றனர் அந்தத் தெரு வாசிகள்.

இதுபோன்ற பிரச்னைகளிலிருந்து விடுபட்டு, சற்றே மன நிம்மதி பெற விரும்பும் தருமபுரி வாசிகளின் விருப்பத்தைத் தீர்த்து வைக்கிற இடம் ஒன்று இருக்கிறது. அதுதான் காமாட்சி அம்பிகா சமேத மல்லிகார்ஜுனேசுவரர் திருக்கோயில். மகா மண்டப விதானத்தில் அஷ்டதிக் பாலகர்கள், தமிழகத்தில் வேறு கோயில்களில் காணக் கிடைக்காத சிற்ப வடிவில் காட்சி தருகிறார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடப் பெற்ற இந்தத் திருக்கோயிலில், அம்மன் கோயிலின் கீழே, ராமாயணக் காட்சிகள் முழுவதும் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டிருக்கின்றன. இன்னோர் அதிசயம், இரண்டு டன் எடையுள்ள தொங்கும் தூண்!

★ தனிச் சிறப்புக்களுடைய காமாட்சி அம்பிகா சமேத மல்லிகார்ஜுனர் கோயில்



மாவட்ட ஆட்சித் தலைவரின் மனைவி டாக்டர் சரசுவதி தசரதனிடம், ''அரசுப் பணியில் இருந்து கொண்டே, கலெக்டரின் மனைவியாகவும் இருப்பது பிளஸ் பாயின்ட்டா, மைனஸ் பாயின்ட்டா?'' என்று கேட்டோம்.

''நான் அரசு மருத்துவமனையில் டாக்டராகப் பணியாற்றுவதால் அங்கே உள்ள பிரச்னைகள் பற்றிக் கணவரிடம் சொல்லும் பொழுது, உடனடி நிவாரணம் கிடைக்க வழி இருக்கிறது. தண்ணீர் வசதி, சுற்றுச் சுவர் பாதுகாப்பு, கூடுதல் சுகாதார வசதிகள் சில... என்று அதிக அளவு சிவப்பு நாடாவுக்குள் சிக்கிக் கொள்ளாமல் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது!'' என்கிறார் டாக்டர் சரசுவதி தசரதன்.

'சமம்' என்ற, புதிதாகத் துவக்கப்பட்ட தொண்டு நிறுவனத்தின் துணைத் தலைவி என்ற முறையில், சமுதாயப் பிரச்னைகளில் தலையாயவற்றை நேரிடையாக அணுகும் வாய்ப்பும் இவருக்கு இருக்கிறது.

''தனியார் நடத்தும் மாதர் சங்கங்கள் பாராட்டத்தக்க பணிகள் செய்து வருகின்றன - குறிப்பாக, கடத்தூரில் உடல் ஊனமுற்றோருக்கான இல்லம். ஆனாலும் பெரியார்-சேலம்-கோவை போல குடும்ப நலத் திட்டப் பணிகளில் தீவிரம் தேவை என்பேன்!'' என்று சொன்ன டாக்டர் சரசுவதி குறிப்பிட்ட ஆரோக்கியமான ஒரு விஷயம்: பள்ளி மாணவிகளில் ஸ்போர்ட்ஸ் ஆர்வம் நிறைந்தவர்களின் திறனை ஊக்குவிக்கப் பயிற்சி மையம் உருவாகியிருப்பது. ஹாஸ்டல் வசதியுடன் வருடத்துக்கு முப்பது பேர் பயிற்சி பெற முடியும். ''தர்மபுரி மாணவிகள் விளையாட்டரங்கில் சாதனைகள் புரிய நிறையவே வாய்ப்புகள் இருக்கின்றன!''

ஒரு கொசுறு :

தர்மபுரியைத் தலைமையிடமாகக் கொண்ட அன்னை சத்யா போக்குவரத்துக் கழகத்துக்கு டீசல் சிக்கனத்துக்காக இவ்வாண்டு மத்திய அரசின் பாராட்டும் பரிசும் கிடைத்திருக்கின்றன.

– சித்தார்த்

# இத்தமிழ்ப் புத்தாண்டில்
# உங்கள் இல்லங்களில்
# இன்பம் பொங்கிட,
# என்றும் மகிழ்ச்சி நிலைத்திட

# நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனத்தின்

## உளங்கனிந்த நல் வாழ்த்துக்கள்



**நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷன் லிமிடெட்**

(ஒரு இந்திய அரசு நிறுவனம்)

நெய்வேலி 607 801 ■ தமிழ்நாடு





# 32. பரதனுக்குச் செய்தி

கௌசல்யா தேவி இறந்து போன அரசனைக் கட்டிக் கொண்டு, ''இன்றே நானும் அரசனோடு கட்டை ஏறுவேன். புத்திரனில்லாமலும் புருஷனில்லாமலும் அனாதையாக என்னால் ஜீவித்திருக்க முடியாது'' என்று அழுது கொண்டேயிருந்தாள். அரண்மனையில் கூடிய பெரியோர்களும் உத்தியோகஸ்தர்களும் கஷ்டப்பட்டு, அவளை மெதுவாக விலக்கி, அழைத்துச் சென்றார்கள்.

பிறகு உத்தர கிரியைகளைப் பற்றி யோசித்தார்கள். அரசனுடைய புதல்வர்கள் யாருமே பக்கத்திலில்லை; ராமலக்ஷ்மணர்கள் வனம் சென்று விட்டார்கள்; பரதனும் சத்ருக்னனும் மாமன் வீட்டில் வெகு தூரத்திலிருந்தார்கள். என்ன செய்வதென்று யோசித்து, முடிவில் பரதனுக்குச் சொல்லியனுப்புவது என்று தீர்மானித்தார்கள். அவன் வந்து சேரும் வரையில் தேகம் கெடாமலிருக்க ஏற்பாடுகள் செய்தார்கள்.

## சக்கரவர்த்தித் திருமகன்

உலகமெல்லாம் புகழ் பரவிப் பல்லாண்டு அரசு புரிந்த மகாராஜாவினுடைய உடலானது எண்ணெய்க் கொப்பரையில் கிடந்தது! அயோத்தியா நகரம் தன் பிரபாவத்தை இழந்து இருளில் ஆழ்ந்தது. எங்கும் அழு குரலும் கண்ணீருமாக இருந்தது. ஜனங்கள் ஆண்களும் பெண்களும் கூடிக் கூடிக் கைகேயியை நிந்தித்துப் பேசினார்கள். ஊர் முழுதும் பெருங் கவலையில் மூழ்கிற்று. இளவரசனாக வேண்டியவன் காடு சென்றான். பரதன் நகரத்தில் இல்லை. ராஜ்யத்துக்குப் பெரும் ஆபத்து வரும் என்று திகிலடைந்தார்கள். அரசனில்லாமல் ஒரு மக்கட் கூட்டம் இருக்க முடியும் என்பதை அந்த நாளில் யாரும் கண்டதில்லை.

அன்றிரவு எப்படியோ கழிந்தது. மறு நாள் காலை மந்திரிகளும் காரியஸ்தர்களும் பெரியோர்களும் சபா மண்டபத்தில் கூடினார்கள். மார்க்கண்டேயர், மௌத்கல்யர், வாமதேவர், காசியபர், காத்தியாயனர், கௌதமர், ஜாபாலி இன்னும் பல வேதியர்களும் சுமந்திரன் முதலிய மந்திரிகளும் வசிஷ்டரை வணங்கி, ''சுவாமி, ஒரு ராத்திரி ஒரு நூற்றாண்டாக இருந்தது. மகாராஜா சுவர்க்கம் சென்றார். ராமனும் லக்ஷ்மணனும் வனம் சென்று விட்டார்கள். பரதனும் சத்ருக்னனும் கேகய நாட்டில் பாட்டன் வீட்டில் வெகு தூரத்தில் இருக்கிறார்கள். தேசம் அராஜக நிலையிலிருக்கிறது. உடனே யாரையாவது ராஜ்யப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளச் செய்ய வேண்டும். அரசன் இல்லாத தேசம் பாழாகப் போகும் அல்லவா?

''அரசன் இல்லாத நாட்டில் நியமமிருக்காது. தகப்பன் சொற்படி மகன் கேட்க மாட்டான். மனைவி புருஷனுக்குக் கட்டுப்பட மாட்டாள். மழை கூடப் பெய்யாது. நாடெல்லாம் திருட்டும் கொள்ளையுமாக இருக்கும். ஜனங்களுக்குள் பரஸ்பர நம்பிக்கையும் ஒத்துழைப்பும் இருக்காது. பயிர்த் தொழில், வியாபாரம் எதுவுமே சரிவர நடக்காது. அரசனுடைய காப்பின்றி எப்படிப் போக்குவரவு, வியாபாரம், அல்லது பயிர்த் தொழில் நடக்கும்? செல்வம் குன்றிப் போகும், தான தருமங்கள் நின்று போகும், தேவாலயங்களில் திருவிழாக்களும் பூஜைகளும் சரியாக நடைபெறாமல் நாட்டில் மக்க

ளுடைய வாழ்க்கை எல்லாம் கெட்டுப் போகும். இதிகாசங்களையும் புண்ணிய கதைகளையும் சொல்லுவோரும் இருக்க மாட்டார்கள்; கேட்பாரும் இருக்க மாட்டார்கள். கதவைத் திறந்து வைத்துத் தூங்க முடியாது. நாகரிகம் என்பது தேய்ந்து தேய்ந்து ஒழிந்தே போகும். தவம், விரதம், ஆனந்தம் ஏதுமே இருக்காது. சாஸ்திரம் படிப் போர் இருக்க மாட்டார்கள். அரசன் ஒருவன் இருந்து நாட்டின் அமைதி யைக் காத்தால் அல்லவோ இவை யாவும் நடைபெறும்? அரசனில்லா விடில் பெண்களுடைய இயற்கை அழகும் அலங்காரமுங்கூட ஒழிந்து போகும். தன் பொருள், தனது என்கிற உறுதியில்லாமல் போகும். மீன்களைப் போல் ஒருவரையொருவர் தின்று சாவார்கள். கொடுமையும் துன்பமும் வளர்ந்து கொண்டு போய் நாடு பாழாகப் போகும். நாட்டில் நிலைத்து

அயோத்தியைக்கு வரும்படியாகச் சொல்ல எங்களை அனுப்பி யிருக் கிறார்கள்' என்று மட்டும் பரதனுக்குச் சொல்லுங்கள். உடனே புறப்பட்டு வரச் சொல்லி அழைத்து வரவேண்டும். ராம னும் சீதையும் வனம் போன விஷய மாவது, அரசன் துக்கப்பட்டு மரணமடைந்த தைப் பற்றியா வது ஒன்றும்



நிற்க வேண்டிய எல்லாவித நன்மை களுக்கும் ஒரு அரசன் வேண்டும்.

இவ்வாறெல்லாம் அந்தச் சபையில் கூடிய பெரியோர் அராஜகத்தின் அபா யங்களைப் பற்றிப் பேசியதாக வால் மீகி அழகாக வர்ணித்திருக்கிறார். ''நாடெல்லாம் இருள் மூடிவிட்டாற் போலாகி விட்டது. தருமம் அழிந்தே போகும் போலிருக்கிறது. உடனே அரசனை அமைத்துக் கொள்ள வேண் டும்'' என்றார்கள்.

சாமர்த்தியமான தூதர்களை அழைத்து வசிஷ்டர், ''உடனே புறப் படுங்கள். நான் சொல்வதைக் கவன மாய்க் கேளுங்கள். எங்கும் நிற்காமல் அதிவேகமாகப் போய்க் கேகய தேசம் சேர வேண்டும். உங்கள் முகங்களிலா வது நடவடிக்கைகளிலாவது துக்கக் குறிகள் ஏதும் இருக்கக் கூடாது. பரதன் தாங்க மாட்டான். அரசன் இறந்து போன விஷயத்தை வெளியிடாமலி ருக்க வேண்டும். 'குலத் தின் குருவும் மந்திரி களும் உங்களை உடனே

சொல்ல வேண்டாம். துக்கக் குறிப்பு இல்லாமலிருப்பதற்காக ஆபரணங் களும் ஆடைகளும் எடுத்துக் கொண்டு போய்க் கேகய ராஜனுக்கு வழக்கம் போல் தந்து மரியாதை செய்யுங்கள்'' என்றார்.

வாய்மை எனப்படுவது யாதெனின்
யாதொன்றும்
தீமை இலாத சொலல்

பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்

என்று குறளாசிரியர் சொல்லியிருப் பதின் பொருள் இதனின்று அறியலாம்.

தூதர்களும் உடனே தாமதமின்றிப் பிரயாணத்துக்கு வேண்டிய உணவு, உடையெல்லாம் கட்டிக் கொண்டு மரி யாதைப் பரிசுகளும் எடுத்துக் கொண்டு வேகமாகச் செல்லும் குதிரைகளில் ஏறிக் குறுக்கு வழியாகக் காடும் மலை யும் ஆறுகளும் கடந்து சென்றார்கள்.

ராஜாஜி

கேகய தேசம்,

அயோத்தியையிலிருந்து வெகு தூரத்திலிருந்தது. அது தற்காலத்து பஞ்சாப் தேசமும் அதற்கும் மேற் கிலிருக்கும் பிரதேசமுமாக வைத்துக் கொள்ளலாம். மலைகளும் ஆறுகளும் தாண்டிக் குதிரைகள் மிகவும் களைத் துப் போய்த் தூதர்கள் கேகய ராஜாவின் பிரதான நகரமான ராஜக்கிரகம் போய்ச் சேர்ந்தார்கள். மறு நாள் காலை பரதனைப் பார்க்க ஏற்பாடு செய்தார்கள்.

தூதர்கள் போய்ச் சேர்ந்த அன்று, இரவில் பரதன் பயங்கரமான கனவுகளைக் கண்டு, அதனால் காலை எழுந்த போது கவலை கொண்டு, முகம் வாடி எழுந்தான். அவனுடைய சினேகிதர்கள் இதைக் கண்டு நர்த்தனமும் ஹாஸ்யமும் செய்து இன்னும் பலவிதத்தில் அவன் கவலையைப் போக்கி, வாடிய முகத்தை மலரச் செய்ய முயன்றார்கள். ஆயினும் அவன் கவலைப்பட்ட நிலையிலேயே இருந்தான்.

அன்பின் ரகசிய வேகங்களை நாம் இன்னும் முற்றிலும் காணவில்லை. தசரதனுடைய மனோவேதனையும் மரண சங்கடமும் வெகு தூரத்திலிருந்த பரதனுடைய உள்ளத்தை யடைந்து தாக்கிக் கனவை உண்டாக்கியதாகக் கருதலாம்.

''என் பிரிய சகோதரனான ராமனோ, அல்லது லக்ஷ்மணனோ அல்லது நானோ மரணம் அடையப் போவதாகத் தோன்றுகிறது. அதிகாலையில் கண்ட கனவு வீண்போகாது என்று சொல்லுவார்கள். பயங்கரமான ஸ்வப்பனத்தைக் கண்டேன். என் மனம் விவரிக்க முடியாத கலவர நிலையிலிருக்கிறது. ரொம்பவும் திகிலாக இருக்கிறது. என்ன செய்வேன்?'' என்று சொல்லிக் கொண்டேயிருந்தான். அச்சமயம் தூதர்கள் தாங்கள் வந்திருப்பதைத் தெரிவித்து, சந்நிதானத்துக்கு வர அனுமதி கேட்டார்கள்.

கேகய ராஜனும் அவனுடைய குமாரன் யுதாஜித்தும் தூதர்களை வெகு மரியாதையுடன் வரவேற்றார்கள். அவர்களும் செலுத்த வேண்டிய வணக்கங்களை முறைப்படி செலுத்திய பிறகு பரதனை நோக்கிச் சொன்னார்கள்:

''புரோகிதர்களும் மந்திரிகளும் தங்களுக்கு மங்கள வாழ்த்துக்கள் சொல்லி, உடனே அயோத்தியா நகரத்துக்கு அழைத்து வர எங்களை அனுப்பியிருக்கிறார்கள். மிக அவசரமான காரியம் என்று சொல்லியனுப்பியிருக்கிறார்கள். இந்த வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் தாங்கள் தொட்டு அரசனுக்கும் மாமனுக்கும் சமர்ப்பிக்க வேண்டும்'' என்று அவர்கள் கொண்டு வந்த ஆடையாபரணப் பொருள்களைப் பரதன் முன் வைத்தார்கள்.

அவனும் அவற்றைப் பெற்றுக் கொண்டு, ''தந்தை தசரதன் க்ஷேமமா? ராமனும் லக்ஷ்மணனும் சுகமா? அனைவரும் நோயொன்று மில்லாமல் சுகமாக இருக்கிறார்களா?'' என்று விசாரித்தான்.

''அனைவரும் நோயின்றி இருக்கிறார்கள் ராஜகுமாரனே! உன் மங்களத்தை எல்லாரும் கோருகிறார்கள். அதற்காகவே சீக்கிரம் வரச் சொன்னார்கள்'' என்றார்கள்.

உண்மையை மறைத்துப் பேசினார்கள். ஆயினும் அவர்களுடைய பேச்சு பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடக்க வேண்டும் என்பதைத் தொனிக்கச் செய்தது.

தூதர்களுடைய விருப்பப்படியே அயோத்தியை போக ராஜ குமாரன் தன்னுடைய பாட்டனார், மாமன் முதலியவர்களுடைய அனுமதியைக் கேட்டுப் பெற்றான். பரதன் அயோத்தியைக்கு உடனே போவதற்கான ஏற்பாடுகளைக் கேகய ராஜனும் யுதாஜித்தும் செய்தார்கள். அயோத்தியையில் தசரத மகாராஜாவுக்கும் ராமனுக்கும் மற்றவர்களுக்கும் தருவதற்கென்று கேகய ராஜ்யத்தில் கிடைக்கக் கூடிய 'மிக விலை உயர்ந்த சன்மானப் பொருள்களைத் திரட்டித் தேர்களில் வைத்து, பரதனையும் சத்ருக்னனையும் பெரும் பரிவாரத்துடன் அனுப்பி வைத்தார்கள். தேர்கள் வேகமாக அயோத்தியை நோக்கிச் சென்றன.

(தொடரும்)



''நீங்க ஜோக் காப்பி அடிச்சு எழுதினதைப் படிச்சுட்டு ஆசிரியர் உங்களைத் திட்டி கடிதம் எழுதினாரா; என்னான்னு?''

''எழுதினவங்க பேரையாவது மாத்தி எழுதித் தொலைக்க கூடாதா'ன்னுதான்!''

- தஞ்சைத் தரணியன்

எங்களது உளங்கனிந்த
தமிழ் புத்தாண்டு
வாழ்த்துக்கள்





அண்ணாமலை
பைனான்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம் : 252, மேட்டுப்பாளையம் ரோடு, கோயமுத்தூர் - 641 043.

போன் : 42224 தந்தி : "ராஜ்தூத்" டெலக்ஸ் : 0855 - 586

கிளைகள் : டெல்லி • பம்பாய் • பூனா • பெங்களூர் • பாண்டிச்சேரி • சென்னை • சேலம் • மதுரை • திருச்சி • திருநெல்வேலி • ஈரோடு • பொள்ளாச்சி • கோபிசெட்டிபாளையம் • காரைக்குடி • வேலூர் • சத்தியமங்கலம் • எர்ணாகுளம் • கோழிக்கோடு • கள்ளக்குறிச்சி

SASI/107/93

**எ**ன் தந்தை எழுதிய கடிதங்கள் எல் லாமே வெறும் லௌகீக விசாரிப்புகளாக இல்லாமல், அர்த்தமும் உணர்ச்சியும் நிறைந்தனவாய் இருக்கும். அறிவுரை பொதிந்தவையாய் இருக்கும். வாழ்க் கைக்கு விளக்கம் சொல்பவையாக இருக் கும். அவருடைய கடைசி கடிதமும் அப் படித்தான் அமைந்திருந்தது. கீதை, உபநிஷத்திலிருந்தெல்லாம் மேற்கோள் காட்டி, அவர் எழுதிய வேறு பல கடிதங் களுடன் அந்தக் கடைசி கடிதத்தையும் பொக்கிஷமாகப் பாதுகாத்து வருகிறேன்.

எனக்கு மனக்கஷ்டம் உண்டாகும் சமயங்களிலெல்லாம் அப்பாவின் கடிதங் களை எடுத்துப் படிப்பேன். அவற்றைப் படித்த பிறகு தென்பும், தெளிவும் நிச்சயம் ஏற்படும்.

அப்பாவின் உதவியாளர் நாராயணன், கல்கத்தாவில் அவர் கடைசி காலத்தில் பயன்படுத்திய சில பொருட்களைக் கொண்டு வந்து என்னிடம் கொடுத்தார். அவற்றுள் மூன்று பொருட்கள் முக்கிய மானவை. ஒன்று - அவர் உபயோகித்த பகவத் கீதைப் புத்தகம். இரண்டு - அவரு டைய மூக்குக் கண்ணாடி. மூன்று - ஒரு ஃபைல். அந்த ஃபைலைப் பிரித்துப் பார்த்த போது எனக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை! அதில் தேதி வாரியாக இருந்தவை : நான் அப்பாவுக்கு எழுதிய கடிதங்கள்!

**அ**டிக்கடி, ''உனக்கு எது சரி என்று தோன்றுகிறதோ அதைச் செய்யத் தயங் காதே'' என்பார் அப்பா. 'சரி எது? தவறு எது?' என்பதைப் பகுத்தறியும் பக்குவமும் அவர் அளித்த பலம்தான்.

அவர் இங்கிலாந்திலிருந்து திரும்பிய சமயத்தில் கடல் கடந்து போனதற்காகப் பிராயச்சித்தம் செய்ய வேண்டும் என்று சிலர் கட்டாயப்படுத்தினார்கள். ஆனால் அப்பா மறுத்து விட்டார். ''ஆத்ம சுத்தியு டன் இருப்பவனுக்கு இந்தியாவும் இங்கி லாந்தும் ஒன்றுதான்'' என்று சொன்னார். அந்தக் காலத்துக்கு அது துணிச்சலான பதில்.

அப்பாவின் தார்மிக தைரியம் என்னை யும் தொற்றிக் கொள்ளத்தான் செய்தது. அதனால் பல சமயங்களில் எனக்கு தர்ம சங்கடங்களும் சிக்கல்களும் ஏற்பட்டன. எனினும் நான் அதற்காக வருத்தப்பட்ட தில்லை.

அப்பாவிடமிருந்து கற்ற மற்றொரு விஷயம் எளிமை. நாங்கள் குழந்தைகளாய் இருந்த போது, குடும்பச் சூழல் காரண மாக, வசதிகள் குறைந்த வாழ்க்கையே நடத்தினோம். பணி நிமித்தம் இந்தியா வின் பல ஊர்களுக்குச் சென்ற அப்பாவு டன் போய்த் தங்கிய போது கிடைத்த அனுபவங்களே எங்களுக்குப் பெரிய செல்வம்! நடிகையாக அங்கீகாரம் பெற்று வசதிகள் பெருகிய காலத்திலும் நான் அந்த எளிமையைக் கைவிடவில்லை. நட்சத்திர விழாக்களில் சக கலைஞர்கள் ஆடம்பர உடைகளில் ஜொலித்த போது கூட நான் பருத்திச் சேலையைத்தான் உடுத்திச் செல் வேன். அதுதான் எனக்கு உண்மையிலேயே பிடித்ததும் கூட....

''சிம்பிளாய் இரு; கையில் காசில்லா விட்டால் கடன் வாங்கியாவது செலவு செய்யணும்னு நினைக்காதே'' என்று அப்பா சொன்னதை நான் மறந்ததே இல்லை. மிகவும் கஷ்டப்பட்ட காலத்தில் கூட என்னைக் கடனாளியாக்காமல் காத் தது அந்த அறிவுரைதான்.

**மு**றையான கல்வி இல்லாவிட்டா லும் நற்பண்புகளைச் சொல்லிக் கொடுத்த தோடில்லாமல், படிக்கும் பயிற்சியும் எங்களுக்கு அளித்தார் அப்பா. தினமும் காலை கிருஷ்ணகுமாரியும் நானும் சேர்ந்து 'ஹிந்து' பேப்பரை அப்பா முன்னிலையில் படிப்போம். ஒருவர் உரக்கப் படிக்க மற்ற வர் உன்னிப்பாகக் கேட்க வேண்டும். புரியாத வார்த்தைகளுக்கு அர்த்தம் சொல் வதும் உச்சரிப்பைத் திருத்துவதும் அப்பா வின் வேலை.

எங்கள் அம்மா ஜமீன் பரம்பரையைச் சேர்ந்தவர். கல்யாணத்தின் போது 'வரதட் சிணையே வாங்க மாட்டேன்' என்று சொல்லி அம்மாவின் குடும்பத்தாரை ஆச் சரியத்தில் மூழ்கடித்து விட்டாராம் அப்பா! அம்மா இதுகுறித்துப் பெருமிதத்துடன் எங்களி டம் சொன்னதுண்டு.

அம்மாவுக்கு முறை யான படிப்பு இல்லை. தெலுங்கு மட்டுமே தெரி யும். திருமணத்துக்குப் பிறகு அப்பாதான் அம்மா வுக்கு ஆங்கிலம் கற்றுத்தர ஏற்பாடு செய்தார். அப்பா

## பார்சலில் வந்த அதிசயம்!



மேல்படிப்புக்காக இங்கிலாந்து போன போது சீனியர் கேம்பிரிட்ஜ் பாடங்களைத் தபால் மூலமாக அம்மாவுக்கு அனுப்பினார். அப்பா உயர் படிப்பு முடித்த சமயத்தில் அம்மா சீனியர் கேம்பிரிட்ஜ் படித்து 'பாஸ்' செய்து விட்டார்!

இன்று என் அம்மாவுக்கு எண்பத்து ஆறு வயது. தங்கை கிருஷ்ணகுமாரியுடன் பெங்களூரில் வசிக்கிறார். இப்போது கூட மிக அழகான ஆங்கிலத்தில், தெளிவான கையெழுத்தில் எனக்குக் கடிதங்கள் எழுதுகிறார். இந்த வருட யுகாதிக்குக் கூட, தன் கைப்பட எனக்குக் கடிதம் எழுதி வாழ்த்துக்களைத் தெரிவித்திருந்தார்.

**நா**ங்கள் தேனாம்பேட்டையில் வசித்தபோது நடந்த ஒரு சம்பவத்தைக் கிருஷ்ணகுமாரியாலும் என்னாலும் மறக்கவே முடியாது. அப்பாவும் அம்மாவும் எங்கள் தங்கை சாய்லக்ஷ்மியை அழைத்துக் கொண்டு ராமேஸ்வரம் போய் வந்தார்கள். ஆறு வயது சாய்லக்ஷ்மிக்குப் பயணத்தின் போது ஏதோ நோய்த் தொற்று ஏற்பட, கடுமையான ஜுரம். அன்று மாலை வீட்டில் ஷீரடி சாய்பாபாவுக்குப் பஜனை நடந்து கொண்டிருந்தது. சாய்லட்சுமி பஜனையின் இடையே, ''அப்பா எனக்குத் தூக்கம் வருது'' என்றாள். அவர் அவளை மடியில் போட்டுக் கொண்டு பஜனையைத் தொடர்ந்தார்.

இடையில் சாய்லக்ஷ்மி கண் விழித்து ஒரு முறை எங்கள் எல்லோர் மீதும் பார்வையைச் சுழல விட்டாள். 'நான் மறுபடியும் வருவேன்' என்று சொல்லி, கண்களை மூடிக் கொண்டாள். அப்பாவின் மடியிலேயே சாய்லக்ஷ்மியின் உயிர் பிரிந்து விட்டது!

அந்தச் சமயத்தில் கூட அவர் நிதானம் இழக்கவில்லை. ''சாயி இறைவனிடம் சேர்ந்து விட்டாள். ஆனால் அவள் சொன்னபடியே நம்மிடம் மீண்டும் வருவாள்'' என்று எங்களுக்கு ஆறுதல் கூறினார்.

**பி**ன்னொரு சமயம் 'மஹிஷாசுர மர்த்தனி' என்ற கன்னடப் படத்தில் நான் நடித்தேன். அப்போது அந்தப் பட டைரக்டர் மற்றும் தயாரிப்பாளர் பி. எஸ். ரங்காவிடம் அப்பாவைப் பற்றி நிறையப் பேசினேன். ஒரு முறை படம் சம்பந்தமான டிஸ்கஷனுக்கு அவர் என் வீட்டுக்கு வந்த போது, அப்பாவின் புகைப்படங்கள் கொண்ட ஆல்பத்தை அவரிடம் காட்டினேன். ''இதிலிருந்து ஒரே ஒரு படத்தை எடுத்துக் கொள்ளட்டுமா?'' என்று அவர் கேட்டு அப்பாவின் போட்டோ ஒன்றைப் பெற்றுக் கொண்டார். எனக்குக் காரணம் புரியவில்லை.

'ஒரு வேளை அதை 'என்லார்ஜ்' செய்து எனக்குப் பரிசளிப்பதற்காக வாங்கிச் செல்கிறாரோ?' என்று நினைத்துக் கொண்டேன்.



* அம்மா - இன்னமும் முத்தான கையெழுத்தில் கடிதம் எழுதுகிறார்

சரியாய் ஒரு மாதம் கழித்து பி. எஸ். ரங்கா போன் செய்து என்னைப் பார்க்க வீட்டுக்கு வருவதாகச் சொன்னார். அரை மணி நேரம் கழித்து அவர் வீட்டினுள் நுழைந்தபோது, அவர் பின்னால் இரண்டு பேர் ஒரு பெரிய பார்சலுடன் வந்தனர்.

சினிமா தொடர்பாகத்தான் பேச வருகிறார் என்று நினைத்துக் கொண்டிருந்த எனக்கு, பார்சலுடன் ஆட்கள் வருவதைப் பார்த்த போதுதான் அப்பாவின் படத்தை ரங்கா வாங்கிச் சென்றது நினைவு வந்தது.

ஆனால் அந்த பார்சலைப் பிரித்த போது உள்ளே இருந்தது, அப்பாவின் படமில்லை!

(தொடரும்)

**சௌகார் ஜானகி**

நீங்கள்
கேட்டவை - தராசு



# கலைஞர் தண்டவாளத்தில் தலை வைத்துப் படுக்கத் தூண்டுகிறாரே?



* குற்றவாளி?

● மு. ரவிசந்திரன், சேலம்.

*? எம். பி. தேர்தல் வழக்கொன்றில் பம்பாய் நீதிமன்றம் பவாரைக் குற்றவாளி என்று அறிவித்துள்ளதே?*

! தேர்தலின் போது தமது ஆதரவு பெற்ற வேட்பாளர் சார்பில் பவார் பேசிய பேச்சு, வரம்பு மீறியது என்று தீர்ப்பாகியுள்ளது. இதனால் பவாரின் ஆதரவு பெற்ற யஷ்வந்ராவ் கடக் எம்.பி. பதவி இழக்கிறார். சவாலுக்கு ஆபத்தில்லை. வழக்கு உச்ச நீதிமன்றத்துக்குப் போகிறது. இதுபோன்ற தீர்ப்புகள் தேர்தல் களத்தில் இறங்கும் எல்லோருக்குமே பாடமாக அமைந்து, ஆரோக்கிய அரசியலுக்கு வழிவகுத்தால் நல்லது. ஆனால் அப்படி நடக்கவா போகிறது? பார்க்கத்தான் போகிறோமே, பழனி - ராணிப்பேட்டை உபதேர்தல்களில்!



* மதிப்பு...

● தி. ரங்கசாமி, கோயமுத்தூர்.

*? தாழ்த்தப்பட்ட மக்களை மேன்மைப்படுத்துவதற்குப் பதில் தனியாக அரிஜன மாணவர் இல்லம் கட்டி பராமரிப்பதேன்?*

! தவறுதான். மனசளவில் இது ஆரோக்கியமானது அல்ல. உடலுக்கும் ஆரோக்கியமில்லை என்பதை சமீபத்தில் அத்தகைய விடுதி ஒன்றில் (M.C. Raja Hostel) நடந்தவை உணர்த்துகின்றன.



* ...மரியாதை

● எஸ். பாலாஜி, சென்னை - 1.

*? சொர்ணம் அம்மாம் பெரிய வால் போஸ்டரில் கல்கிக்கு இலவச விளம்பரம் தந்துள்ளாரே?*

! இளைய சூரியன் சாடலைத்தானே குறிப்பிடுகிறீர்கள்? கலைஞர் தமது ம.மீ. விமர்சனத்தைப் ''பார்த்தேன், படித்தேன், ரசித்தேன்'' என்னும் போது நாமும் அப்படியே பண்புடன் சொல்லி விட்டுப் போகலாமே! ஏற்பது வேறு, ரசிப்பது வேறு அல்லவா?

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபுரம்.

*? மீண்டும் கலைஞர் தண்டவாளத்தில் தலைவைத்துப் படுக்கத் தூண்டுகிறாரே?*

! இந்தி ஏகாதிபத்திய உணர்வை எதிர்க்க வேண்டும்தான். ஆனால் ரயில் மறியல் அதற்கு உபாயமல்ல. மக்களுக்குத் துன்பம் தரும் எந்தக் கிளர்ச்சியும் ஜனநாயகத்தில் மக்களின் வெறுப்பையே பெற்றுத் தரும்; ஆதரவை அல்ல.



* பங்ரா நடனம்

● தேனம்மாள் ராமசாமி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

*? ஒரு தனிமனிதன் 192 பேர் பயணம் செய்த விமானத்தைக் கடத்தியது பற்றி?*

! அதிலும் ஒரு ஹேர் டிரையரை துப்பாக்கி என்று எல்லோரையும் நம்ப வைத்து... படா கில்லாடிதான் போங்க! இருந்தாலும் விவரம் புரியும் வரை பயணிகளுக்கு 'பக் பக்'தான்.

● முருகேசன், தேனி.

*? சட்டசபையில் எம்.எல்.ஏக்கள் அடிதடி விஷயம் பற்றி உண்மையிலேயே கவலைப்படுகிறவர்கள் யார்?*

! படாதிபதிகள். கிளைமாக்ஸுக்கு அவர்கள் இனி சட்டசபை செட்தான் போட வேண்டும் போல! அது உரிமைப் பிரச்னையை எழுப்புமா எழுப்பாதா என்ற சட்ட பாயிண்ட் வேறு!

● ஏ. எம். பழனிசாமி, கோவை.

*? எந்தக் கட்சி போக்கை மாற்றிக் கொள்ளாததால் உங்களுக்கு வருத்தம் அதிகம்?*

! சந்தேகமில்லாமல் பி.ஜே.பி. ஏனெனில் வாஜ்பாயி, அத்வானியிடம் எனக்கு நிறையவே மதிப்பும் மரியாதையும் உண்டு.

● ஆர். முரளி, ஹோசூர்.

*? ரஜினிதான் சம்பளத்தைக் குறைத்துக் கொண்டு விட்டாரே, இனியாவது பிரச்னை தீருமா?*

! இதை அன்றே ரஜினி சொல்லியிருந்தால் பிரச்னையே கிளம்பியிருக் காது என்று கூறி விட முடியாது. எவ்வளவு குறைத்துக் கொள்வது என்ற பிரச்னை அடுத்ததாக எழுந்திருந்திருக்கும்!



✱ சம்பளம் கட்!

● என். நாகராஜ், வரகூர்.

*? இவ் வருட ரஞ்சி கோப்பை பற்றி?*

! பஞ்சாபுக்குப் போய் விட்டது ஆச்சர்யம். இது அவர்களின் முதல் வெற்றி. அதற்காகக் கடுமையாக உழைத்த பிஷின் சிங் பேதியின் வெற்றி. அவர் பங்ரா நடனம் ஆடியதில் வியப்பில்லை. வாழ்த்துவோம்.

● வீ. சோழன், செம்போடை.

*? 'தமிழக சட்டசபையைக் கலைக்க வேண்டும் என்று 'ஜெ' சிபாரிசு செய்தால் அதை ஆளுனர் ஏற்கக் கூடாது' என்று எஸ். ஆர்.பி. கூறியுள்ளது குறித்து...?*

! 'ஜெ'க்கு தேர்தல் கமிஷன் மூலம் ஆபத்து வந்தாலும் சட்டமன்றம் அப் படியே இருந்தால் புதியதொரு கூட்டணி உருவாகி மந்திரி சபை அமைக்க முடியும் என்ற கருத்தில் பேசுகிறார். அப்படி அமையும் அமைச்சரவை மட்டும் எத்தனை காலம் நீடிக்குமாம்? அதைவிடத் தேர்தலைச் சந்திப் பதே நல்லது. ஜெயை நம்பியே வோட்டுப் போட்ட மக்களுக்கு நியாயம் செய்ததாகவாவது இருக்கும்.



✱ மரண மர்மம்

● ஜெயககந்தி, திருத்துறைப்பூண்டி.

*? மத்தியப் பிரதேச உயர்நீதிமன்றத் தீர்ப்பை அடுத்து, மத்திய அரசு பதவி விலக வேண்டும் என்ற கோரிக்கை நியாயமானதா?*

! உத்தரப்பிரதேச கல்யாண் சிங் அரசின் கையாலாகாத்தனத்துக்காக நாலு பி.ஜே.பி. அரசுகள் பழிவாங்கப்பட்ட அநியாயத்தை விட இந்தக் கோரிக்கையில் நியாயம் உண்டு. ஆயினும் அதை வலியுறுத்துவதை விட நாலு சட்டமன்றங்களும் மந்திரி சபைகளும் மீண்டும் செயல்பட வழி வகுக்க வேண்டும் என்று வற்புறுத்துவதே விவேகம். எதற்கும் உச்சநீதி மன்றம் என்ன சொல்கிறதோ, பொறுத்திருந்து பார்ப்போம்!



✱ சீண்[illegible]ர்!

● சா. ரமேஷ்பாபு, லால்குடி.

*? கோவில்பட்டியில் விவசாயிகள் மீது நடந்த துப்பாக்கி சூடு சம்பவம் பற்றி...?*

! என்னதான் விசாரணைக் கமிஷன் அமைத்து அதன் தீர்ப்பு என்னவா னாலும் ஜெ அரசுக்கு இதுபோன்ற சம்பவங்கள் பெரும் களங்கம். அதிலும் விவசாயிகளுக்கு நடக்கும் துன்பம் கிராமப்புற மக்கள் மனங் களை வெகுவாகப் பாதிக்கும். இலவசங்கள், ஆயிரம் கார் பவனி இவற் றால் இந்தப் பாதிப்பை ஈடுகட்ட முடியாது. தவிர்த்திருக்கக்கூடிய, தவிர்க்க வேண்டிய சம்பவம். வருமுன் காப்பதுதான் ஆட்சிக்கு அழகு- வந்தபின் பதறுவது அல்ல.



✱ ''கலைக்கக் கூடாது!''

● ப. ரவிகுமார், திருத்துறைப்பூண்டி.

*? சமீப காலமாக முக்கியத்துவம் வாய்ந்த பல தீர்ப்புக்களை கோர்ட் வழங்கி வருவது பற்றி...?*

! பெருந்தலைகள் சம்பந்தப்பட்ட வழக்குகளை விட்டுத் தள்ளுங்கள். ஒரு பஸ் டிரைவர் இரு தமிழக அமைச்சர்களால் அநியாயமாகப் பழிவாங் கப்பட்ட போது அந்த டிரைவருக்கு நீதி கிடைக்கச் செய்திருக்கிறதே, அதற்காகத் தலைவணங்கி நன்றி கூறுகிறோம். இந்த லட்சணத்தில் தமது கட்சிக்காரர்கள் ரொம்பப் பொறுமையாகச் செயல்படுவதாகச் சான்றிதழ் வேறு வழங்குகிறார் 'ஜெ'.!

● பிரபாலிங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்.

*? குமுதம், இயக்குனர் சிகரத்தைச் சீண்டியிருக்கிறதே?*

! அவர் விஷயம் தெரியவந்து, ''வேண்டாம்'' ''கூடாது'' என்று அழுத்தமாகச் சொன்ன பிறகும் செய்திருப்பது, ஏப்ரல் முட்டாள்தனம் மட்டுமல்ல, அதற்கும் மேலே!

● வி. சத்தியப்ரியன், சென்னை.

*? க்ரைம் கார்னர் தொலைக்காட்சி தொடர் பற்றி...?*

! எந்த மர்ம நாவல், சினிமா அல்லது தொலைக்காட்சி தொடரையும் தூக்கிச் சாப் பிட்டு விடுவதாக உள்ளது, புரூஸ் லீ மரண மர் மமும் அவர் மகனும் அதே போல் மர்மமான முறையில் செட்டில் மரணமடைந்ததும். பிர மாதமாகக் கதை பின்னி தொடர் தயாரிக்க லாமே!

❒ ரூ 25 பரிசு பெறுபவர் :
தி. ரங்கசாமி,
கலா மன்றம்,
வேலாண்டிபாளையம்,
கோவை - 641 037.

ஜெய ஜெய சங்கர ஹர ஹர சங்கர

காஞ்சி காமகோடி மடத்துக்காக

காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின்
அருளாசியுடன்

மணியன் கிரியேஷன்ஸ்
பக்தியுடன் அளிக்கும்



# மீண்டும் சங்கர விஜயம்



காஞ்சி பரமாசாரிய சுவாமிகளின்
வாழ்க்கை சரிதம்
வீடியோ படம்

பரமாசாரியாரின் ஜெயந்தி விழாவான
மே-7 அன்று வெளிவருகிறது.

விபரங்களுக்கு:
'ஞானபூமி' மணியன்
'மணியன் கிரியேஷன்ஸ்'

36, சுப்பிரமணியம் தெரு, அபிராமபுரம், சென்னை - 600 018.
தொலைபேசி எண்: 45 97 79-234 26 81 - 45 71 40

# பாயப் பதுங்குகிறார் பாண்டித்துரை!



"தருமபுரி மாவட்டம் பின்தங்கிய மாவட்டம் என்பதற்காக, நகரிலுள்ள தெருக்களும் கூட சுகாதாரத்தில் பின்தங்கித்தான் இருக்க வேண்டுமா என்ன?" - தருமபுரி நகராட்சி கமிஷனர் பி. பாண்டித்துரையிடம் கேட்டோம்.

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லையே! நீங்கள் எந்தத் தெருவைச் சொல்கிறீர்கள்?"

"ஹரிஹரநாத ஸ்வாமி தெருவைப் பார்த்தோம். குப்பைகள் அள்ளப்படவில்லை; பன்றிகள் விளையாடிக் கொண்டிருக்கின்றன."

"இன்று ஞாயிற்றுக் கிழமை. அதனால் அப்படி இருந்திருக்கலாம். மற்ற நாட்களில் எல்லாத் தெருக்களையும் சுத்தம் செய்து கொண்டுதானிருக்கிறார்கள்."

"ராஜகோபால் கவுண்டர் பூங்கா. உங்கள் அலுவலகத்திற்கு அருகிலேயே உள்ள பூங்கா. அது பூங்காவா? சுட்டாந்தரையா?"

"பூங்காவைப் பராமரிக்கிற விழிப்புணர்வு பொது மக்களிடமும் இருக்க வேண்டும். அது இங்கு இல்லை. அதனால் என்னதான் செடி கொடிகளை வைத்தாலும் அவை பாழாக்கப்பட்டு விடுகின்றன!"

"நாங்கள் ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பு 'மாதம் ஒரு மாவட்டம்' என்று சுற்றுப் பயணம் வந்த போதும் அந்தப் பூங்கா இப்படியேதான் இருந்தது!"

"நான் அண்மையில்தான் இங்கு கமிஷனராகப் பொறுப்பேற்றேன். இன்னும் இரண்டு மாதங்கள் கழித்து வந்து பாருங்கள். பூங்கா, பூங்காவாகவே காட்சியளிக்க நடவடிக்கை எடுக்கிறேன்." நாளை பாய்வதற்காக இன்று பதுங்குவது போல் பதிலளித்தார் பாண்டித்துரை.

"நகருக்குள் இருக்கிற 'பல்ப் குட்டை' கூட நாங்கள் முன்பு பார்த்த மாதிரியேதான் இருக்கிறது. அவ்வளவு பெரிய இடத்தைக் குப்பை கூளங்களைப் போட்டுக் கொண்டிருப்பதைத் தவிர்த்து நல்ல முறையில் பயன்படுத்தலாமே?"

"அதில் நகராட்சிக்குச் சொந்தமான திருமண மண்டபம் கட்டுகிற பணியை விரைவில் துவக்க இருக்கிறோம்."

"பஸ் நிலையத்துக்குள் இருக்கும் சுவர்க் கடிகாரம் யாருக்கும் தெரியாத வகையில்தான் பொருத்தப்பட்டுள்ளது. அதையொரு மணிக்கூண்டு கட்டிப் பொருத்தினால் பலரும் மணி பார்க்க வசதியாக இருக்குமே?"

"இதுவொரு பெரிய விஷயமேயில்லை. இதோ உடனடியாக உத்தரவிடுகிறேன். (உடனே உத்தரவை டிக்டேட் செய்கிறார்) இன்னும் ஒரே வாரத்தில் அதைச் செய்து முடித்து விடுகிறேன்."

"பஸ் நிலையத்தில் பொருத்தப்பட்டுள்ள மெர்க்குரி விளக்குகளின் வெளிச்சம் போதவில்லை; சோடியம் வேப்பர் விளக்குகளைப் பொருத்தினால் பிரகாசமான வெளிச்சம் கிடைக்கும்; போக்குவரத்துக்கு வசதியாக இருக்கும் என்று பலர் கருதுகிறார்களே?"

"இப்போது புதிதாகச் சோடியம் வேப்பர் விளக்குகள் பொருத்தப்படக் கூடாது என்று நகராட்சிகளுக்கு அரசு ஆணையிட்டுள்ளது. அது காரணமாகத்தான் பொருத்தப்படாமல் உள்ளன. வேண்டுமானால் நீங்கள் குறிப்பிட்டதற்காக அரசிடம் சிறப்பு அனுமதிக்கு எழுதிப் பார்க்கிறேன்!"

"பஸ் நிலையம் கூட குண்டும் குழியுமாகத்தானே இருக்கிறது?"

"மூன்றரை லட்சம் செலவில் பழைய பஸ் நிலையத்துக்கு அருகிலேயே நகரப் பேருந்துகளுக்காக புதிய பஸ் நிலையம் உருவாகிக் கொண்டிருப்பதை நீங்களே பார்த்திருப்பீர்கள். அது உருவாகி விட்டால், பழைய பஸ் நிலையத்தில் நெருக்கம் குறைந்து நல்ல முறையில் பராமரிக்கப்படும்!

- பிரின்ஸ்



## தருமபுரி செய்திகள் :

தமிழரசிக்கு இரண்டு குழந்தைகள். கணவர் ராஜுவுக்கு மின்வாரியத்தில் லைன் மேன் வேலை. செட்டாகக் குடும்பம் நடத்தினால் குடும்பமே சொர்க்கம்தான். வானமும் அவருக்கு வசப்பட்டுப் போகும்தான். ஆனால் கூடா நட்பு, குடியை அறிமுகப் படுத்தி விட்டது. குடி. குடி. சதா குடி. தமிழரசியின் கண்களில் கூட சம்பளப் பணத்தைக் காட்டுவதில்லை. கேட்டால் அடி, உதை.

''நான் பொறுத்துப் பொறுத்துப் பார்த்து விட்டேன். போராடிப் போராடியும் பார்த்து விட்டேன். அவரைத் திருத்தவே முடியவில்லை. இனி கலெக்டர் ஐயா மனசு வைத்துத்தான் அவரைத் திருத்த வேண்டும்!'' என்று மனுநீதி நாளன்று தருமபுரி மாவட்ட ஆட்சித் தலைவர் தசரதனிடம் வந்து முறையிடுகிறார் தமிழரசி.

''இனி மாதா மாதம் சம்பளப் பணம் உங்கள் கைக்குக் கிடைக்கும்படி செய்து விட்டால் போதுமாம்மா? இல்லை வேறு ஏதாவது செய்ய வேண்டுமா?'' - இது கலெக்டர்.

''சம்பளமும் கிடைக்க வேண்டும்; அவரும் திருந்த வேண்டும்!''

''நீங்கள் சொல்லியே திருந்தாத உங்கள் கணவர், நான் சொன்னால் திருந்தி விடுவாரா?''

''கலெக்டர் ஐயா அவரைக் கொஞ்சம் மிரட்டிப் பார்க்கலாமே?''

''உள்ளூர்ப் போலீஸிடம் சொல்லி மிரட்டட்டுமா?''

''மிரட்டுங்கள்! ஆனால் அவரை அடித்து விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்கிறார் தமிழரசி!

கிருஷ்ணகிரி அணையிலுள்ள பயிற்சிப் பள்ளியில் கேஷியராக வேலை பார்க்கும் ஆறுமுகம், தமது மனைவி தமிழ்ச் செல்வியைத் தள்ளி வைத்து விட்டார். இத்தனைக்கும் தமிழ்ச் செல்வியின் கணவர் அவரது தாய்மாமன்தான்! ''எப்படியாவது அவரை என்னோடு சேர்ந்து வாழச் செய்யுங்கள்!'' என்று முறையிடுகிறார் தமிழ்ச்செல்வி.

# தருமபுரி கலெக்டர் தசரதின் பேட்டி

''இனியும் அந்த மனுஷனோடு சேர்ந்து வாழ எனக்கு இஷ்டமில்லை. எப்படி யாவது எனக்கு அந்த ஆளிடமிருந்து விவாக ரத்து வாங்கித் தர ஏற்பாடு செய்யுங்கள்; உங்களுக்குப் புண்ணியமாய்ப் போகும்!'' என்று முறையிடுகிறார் மிண்டிகிரி என்னும் கிராமத்தைச் சேர்ந்த பூங்கொடி.

''நீங்களேதான் பார்த்தீர்களே! நம் நாட்டிலுள்ள பெரும்பாலான பெண்களுக்குக் கணவன்தான் பிரச்னையாகவே இருக்கிறான். மற்றபடி வேலை கேட்டு, கடன் கேட்டு... இப்படித்தான் வருகிறார்கள்!''

''இப்படி வருகின்ற எல்லா மனுக்களின் மீதும் நடவடிக்கைகள் எடுத்துத் தீர்வு காண முடிகிறதா?''

''முழுக்க முழுக்க என்பது சாத்தியமில்லை தான். ஆனால் அதற்காகச் சும்மா இருந்து விடுவதில்லை. முடிந்த அளவுக்கு நடவடிக்கைகள் எடுக்கிறோம். எல்லோருக்கும் அரசாங்கத்திலேயே வேலை கொடுப்பது என்பது நடக்காத காரியம் என்பதால், வேலை கேட்டு முறை

## ''முதல்வர் தொகுதிக்கு மட்டுமே முதல் மரியாதை என்பதில்லை!''


✱ மனுநீதி நாள்

''கல்யாணமாகி எத்தனை வருசமாச்சும்மா?''

''மூணு வருஷம்!''

''அதற்குள்ளா இப்படியொரு வெறுப்பு?''

''முடியலைங்க. அந்தாளோட கொடுமையைத் தாங்க முடியலைங்க!''

''நான் வேணும்னா பேசிப் பார்க்கட்டுமா?''

''அது வேதாளம்ங்க. திருத்தவே முடியாது!''

அடுத்ததாக ஒரு சிறுவன். கால் ஊனம். ரொம்பவும் கஷ்டப்பட்டுக் கால்களை இழுத்து இழுத்து நடந்து வருகிறான்.

''என் பெயர் காளியப்பன். ஐந்தாம் வகுப்பு படிக்கிறேன். என் வீட்டுக்கும் பள்ளிக்கூடத்திற்கும் ஆறு கிலோ மீட்டர். ஒரு மூன்று சக்கர சைக்கிள் வாங்கிக் கொடுத்தால் எனக்கு வசதியாக இருக்கும். நான் யாருடைய துணையும் இல்லாமல் பள்ளிக்கூடம் போய் வந்து விடுவேன்!''

''அவசியம் ஏற்பாடு செய்கிறேன்!''

''எல்லா மனுநீதி நாட்களிலும் இது போன்ற மனுக்கள்தான் வருகின்றனவா?'' - கலெக்டர் தசரதனிடம் நாம் கேட்கிறோம்.

விடுபவர்களிடம் நன்கு விசாரிக்கிறோம். அவர்களுக்கு என்ன தெரியுமோ, அதை வைத்துக் கொண்டு ஏன் தொழில் துவங்கக் கூடாது என்று ஊக்கப் படுத்தி, கடனுதவி கிடைக்க ஏற்பாடு செய்கிறோம்! தொழிற் பயிற்சிகளுக்கும் ஏற்பாடுகள் செய்கிறோம். இது மாத்திரமல்லாமல் மாவட்ட வளர்ச்சிக் கழகத்தின் மூலம், மண்பாண்டத் தொழிலாளர்கள், செருப்புத் தைக்கும் தொழிலாளர்கள், தச்சுத் தொழிலாளர்கள், பொற்கொல்லர்கள் போன்றவர்கள், தங்கள் தொழில்களை நவீனக் கருவிகள் கொண்டு செய்வதற்கும் உதவுகிறோம்.''

''சேலத்திலிருந்து தருமபுரி மாவட்டம் தனியாகப் பிரிக்கப்பட்ட பிறகு எந்த அளவுக்கு வளர்ச்சியடைந்திருக்கிறது?''

''உற்பத்தி பெருகியிருக்கிறது. உதாரணத்திற்கு நெல் உற்பத்தியை எடுத்துக்

கொள்ளுங்கள். மாவட்டம் பிரிக்கப்பட்டபோது, 65,000 டன்னாக இருந்த நெல் உற்பத்தி இப்போது 1,70,000 டன்னாக உயர்ந்திருக்கிறது. தொழில்வளம் பெருகியிருக்கிறது. சுருக்கமாகச் சொன்னால், வறுமைக் கோட்டுக்குக் கீழ் இருந்தோரின் சதவிகிதம் அறுபதிலிருந்து நாற்பதாகக் குறைந்திருக்கிறது! தமிழகத்தின் மாம்பழ விளைச்சலில் நாற்பது சதம் இங்குதான். கொல்லப்பட்டியிலிருக்கும் பட்டுப் பண்ணைதான் ஆசியாவிலேயே பெரிய பட்டுப் பண்ணை. தமிழகம் முழுவதற்கும் பட்டுப் புழு வளர்ப்புக்கான முட்டைகள் இங்கிருந்துதான் செல்கின்றன!''

''இந்த நிலையிலும் இது பின்தங்கிய மாவட்டமாகத்தானே இருக்கிறது?''

''காரணம் வறட்சி. கிருஷ்ணகிரி அணையின் பாசனப் பகுதிகள் தவிர, மற்ற இடங்களெல்லாம் நிலத்தடி நீரையும் மழையையும்தான் நம்பியிருக்கின்றன. மழையளவு குறைகிற போது என்ன செய்ய முடியும்? பல சந்தர்ப்பங்களில் வளர்ச்சித் திட்டங்களுக்குப் பயன்படுத்த வேண்டிய தொகைகளை வறட்சியைச் சமாளிப்பதற்கே செலவிட வேண்டி வந்து விடுகிறது! இருப்பினும் பின்தங்கிய மாவட்டங்களுக்குக் கிடைக்கிற பல்வேறு நலத் திட்டங்களையும் உதவிகளையும் பயன்படுத்தி, வறட்சிக் காலங்களில் மக்கள் பிழைப்புத் தேடி வெளியூர்களுக்குக் குடிபெயர்வதை, முடிந்த வரை தடுத்துக் கொண்டுதானிருக்கிறோம்.''

''முதலமைச்சர் தொகுதி உங்கள் மாவட்டத்திலிருப்பதால், அவருடைய தொகுதியை மட்டும் சிறப்பாகக் கவனித்து, மற்ற பகுதிகளை மேம்போக்காகக் கவனிக்க வேண்டிய நிலை இருக்கிறதா?''

''நிச்சயமாக இல்லை. அண்மையில் மாண்புமிகு முதல்வர் அவர்கள் வந்து மாவட்டம் முழுமைக்குமான அரசு திட்டப் பணிகள் மற்றும் நலத் திட்ட உதவிகள் ஆகியவற்றைத் துவக்கி வைத்தார். அவற்றின் மதிப்பீடு 238 கோடி ரூபாய். அதில், முதல்வர் தொகுதியான பர்கூருக்கு நாற்பது கோடி ரூபாய் மதிப்பீட்டுத் திட்டங்கள் தான். எனவே, இங்கே முதல்வர் தொகுதி மட்டும்தான் சிறப்பாகக் கவனிக்கப்படுகிறது என்ற பேச்சுக்கே இடமில்லை!''

''ஒகேனக்கல்தான் இங்குள்ள பிரபலமான சுற்றுலாத் தலம். அதை மேம்படுத்தும் திட்டங்கள் ஏதாவது உள்ளனவா?''

''ஒகேனக்கல் ஒரு நல்ல சுற்றுலாத் தலம்தான் என்றாலும் வரும் சுற்றுலாப் பயணிகளை இரண்டு மூன்று நாட்கள் தங்கிச் செல்வதற்கான ஈர்ப்பு சக்தியைப் பெற்றிருக்கவில்லை. காரணம், ஆண்டு முழுவதும் இங்கு தண்ணீர் இருந்தாலும் அது பல அருவிகளாப் பிரிந்து விழுகிற இடம், மக்கள் சென்று சுலபமாகக் குளிக்கும் விதமாக இல்லை. நமது பொறியியல் வல்லுனர்கள் அப்படியொரு வசதியைச் செய்ய முடிந்தால் ஒகேனக்கல், ஆண்டு முழுவதும் கொட்டுகிற குற்றாலமாக மாறி எல்லா மக்களையும் ஈர்க்கும் சக்தி படைத்ததாகி விடும். அப்படிப்பட்ட நிபுணர்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்!''

''தருமபுரியை ஒட்டியுள்ள வீட்டு வசதிவாரியக் குடியிருப்புப் பகுதிகளில் கூட குடிநீர்ப் பற்றாக்குறை இருக்கிறது.''

''உண்மைதான். அதற்கான நிலையான தீர்வு ஒகேனக்கல் கூட்டு குடிநீர்த் திட்டம் ஒன்றுதான். முதல்வரிடமும் இது பற்றி வேண்டுகோள் விடுத்திருக்கிறோம். அதோடு பெண்களுக்கான கல்லூரி ஒன்றும் - அதுவும் தொழில் சார்ந்த கல்லூரி - தருமபுரிக்கு அவசியம் தேவையென்பதையும் முதல்வரிடம் எடுத்துச் சொல்லியிருக்கிறோம்! இவற்றோடு தருமபுரியில் குழந்தைகளுக்கான கோளரங்கம் (Planetarium) ஒன்று அமைப்பதற்கான முயற்சிகளையும் எடுத்து வருகிறோம்!''

''எழுத்தறிவு இயக்கம் பற்றிய பரபரப்பு உங்கள் மாவட்டத்தில் இருப்பதாகத் தெரியவில்லையே?''

''உண்மைதான். இங்கு படித்தோரின் எண்ணிக்கை ஆண்களில் 48 சதம். பெண்களில் வெறும் 32 சதம்தான். இந்த நிலையில் பெண்களுக்கான கல்வியறிவு கொடுப்பதில் தான் உடனடியாகக் கவனம் செலுத்த வேண்டும். வெறும் எழுத்தறிவு மட்டும் போதாது. அதற்கும் மேலான கல்வியறிவும் கொடுத்தாக வேண்டும். அப்படியொரு கல்வியறிவைப் பெறுவதற்கான ஆர்வத்தையும் அவர்கள் மத்தியில் உருவாக்க வேண்டியிருக்கிறது. ஆக, அடிப்படை விழிப்புணர்ச்சியொன்றை ஆரம்பத்தில் உருவாக்கினால் தான் திட்டம் முழுமையாக வெற்றி பெறும். இல்லையெனில் படிப்பறிவு பெற்றோரின் எண்ணிக்கை வெறும் புள்ளி விவரங்களாகவே போய் விடும். எழுத்தறிவுக்கான முதல்கட்ட முயற்சியை மக்களிடம் துவக்கியிருக்கிறோம். அடுத்த படிக்கு இனிமேல் தான் நாங்கள் செல்ல வேண்டும்.''

அடுத்த இதழில்...

●● 'மணி' ஓசைக்கு மயிலாடுகிறது!

— Special Report















''பொதுவாக மாவட்ட மக்களின் மனோநிலை எப்படி?''

''மிகவும் நல்லவர்கள்தான். ஆயினும் பணம் படைத்தவர்களின் மனோநிலை கூட தங்கள் பணத்தை ஏதாவதொரு தொழிலில் முதலீடு செய்தால் அது பல பேருக்கு வேலை வாய்ப்பையளிப்பதோடு, நாட்டின் பொருளாதாரத்தையும் உயர்த்தும் என்கிற அளவுக்கு வளரவில்லை. கந்து வட்டிக்கு விடுவதிலேயே குறியாக இருப்பதுதான் வேதனை. ஆக, இந்த மாதிரியான மனோநிலையை மாற்றுவதற்குத்தான் நான் முன்பே சொன்னது போல், வெறும் எழுத்தறிவு போதாது; அதற்கும் மேலான கல்வியறிவைக் கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் முழுமையான முன்னேற்றம் கிடைக்கும்.''

''தருமபுரியிலும் சரி, மற்றும் உள்ள சில ஊர்களிலும் சரி, சினிமா தியேட்டர்களில் டிக்கெட்டுகளே கொடுக்கப்படுவதில்லையென்றும், வெறுமனே சிகரெட் அட்டைகளைக் கொண்ட டோக்கன்கள் தான் கொடுக்கப்படுகின்றனவென்றும் சொல்கிறார்கள். இதனால் அரசுக்குத்தானே வரி மூலம் கிடைக்கும் வருமானம் தடைப்படுகிறது?''

''இப்படிப்பட்ட புகார்கள் எங்களுக்கும் வந்ததையடுத்து, நாங்களும் அடிக்கடி சோதனைகளுக்குச் சென்று கொண்டுதானிருக்கிறோம். ஆனால், நாங்கள் என்னதான் ரகசியமாகப் புறப்பட்டாலும் அது அவர்களுக்கு எப்படியோ தெரிந்து போய் உஷாராகி விடுகிறார்கள். ஆயினும் தொடர்ந்து கண்காணித்துக் கொண்டுதானிருக்கிறோம்!''

''தருமபுரியிலுள்ள சலவைத் தொழிலாளர்களுக்கு நகரையொட்டியே சலவைத் துறையொன்று அமைத்துக் கொடுத்தால் வசதியாக இருக்குமென்றும், அதற்கான இடமெல்லாம் தெரிவு செய்யப்பட்ட நிலையிலும் இதுவரை நடவடிக்கையெடுக்கப்படவில்லையென்றும் சொல்கிறார்கள். அதோடு, அவர்களுக்குப் பாத்யதையான 77 செண்ட் நிலத்தையும் தனியாரொருவர் ஆக்ரமித்துக் கொண்டிருப்பதாகவும் சொல்கிறார்கள்...!''

''உடனடியாக நடவடிக்கையெடுக்கிறேன்.'' (அருகிலிருந்த நகராட்சி கமிஷனரிடம் விரைவான நடவடிக்கையெடுக்கச் சொல்கிறார்).

''மொரப்பூரிலுள்ள ரயில்வே கிராஸில் ஒரு மேம்பாலம் அமைத்தால் போக்குவரத்துக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்காதா?''

''உண்மைதான். ஆனால் அந்தத் திட்டத்தை அரசுதான் செயல்படுத்த முடியும். நாங்கள் அரசுக்கு சிபாரிசுதான் செய்ய முடியும்.''

பேட்டி : **இளங்கோவன்**






தர்மபுரி
மாவட்டம்

# சிந்தனைக்குச் சில தகவல்கள்

●● தமிழகத் தின் இரண்டாவது பெரிய மாவட்டம் : 9622 சதுர கி.மீ. (மிகப் பெரிய மாவட்டம் திருச்சி)

●● மிகக் குறைவான நகர மக்கள் தொகை : 9.41% (மாநில அளவில் 34.20%)

●● ஆயிரம் ஆண்களுக்கு 944 பெண்கள். (மாநில அளவில் 972)

●● மிகக் குறைவான ஜனத்தொகை அடர்த்தி. சதுர கி.மீக்கு 249 பேர். (மாநில அளவில் 420)

●● மிகக் குறைவான கல்வி அறிவு : 39.83% (மாநில அளவில் 54.61)

●● மிகக் குறைவான மருத்துவ வசதி : ஒரு லட்சம் பேருக்கு 43 ஆஸ்பத்திரி கட்டில்கள். (மாநில அளவில் 79)

●● குடிநீர் விநியோகம் உள்ள கிராமங்கள் 81% (மாநில அளவில் 85%)

●● தொழிலகங்கள் போன்ற நிர்வகிக்கப்படும் துறைகளில், முறையான வேலை வாய்ப்புப் பெற்றோர் : ஒரு லட்சம் ஜனத் தொகைக்கு 2567. (மாநில அளவில் 4115)

●● மோட்டார் வாகனங்கள் : ஒரு லட்சம் ஜனத் தொகைக்கு 1015 (மாநில அளவில் 2767)

●● உணவு தானிய உற்பத்தியில் ஜனத் தொகையுடன் ஒப்பிட தர்மபுரி சிறந்து விளங்குகிறது. சராசரியில் நபர் ஒருவருக்கு 172 கிலோ உற்பத்தி. (மாநில அளவில் 136) இதற்காகப் பயன்படுத்தப்படும் உரமும் மிகக் குறைவு! சராசரியில் ஹெக்டேருக்கு 32 கிலோதான். (மாநில அளவில் 122 கிலோ.)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# விவேகானந்தா கல்வி நிலையத்தின்
# கோடை விடுமுறை ஆங்கிலப் பயிற்சித் திட்டம்

## சேர்க்கை அறிவிப்பு

ஆங்கிலப் பயிற்சியளிப்பதில் தமிழகத்தின் தலை சிறந்த கல்வி நிலையம் என்ற தனிப் புகழ் பெற்று விளங்கும் விவேகானந்தா கல்வி நிலையத்தினர் கோடை விடுமுறை நாட்களை மாண வர்கள் பயனுள்ள வகையில் கழிக்க கோடை விடுமுறை ஆங்கிலப் பயிற்சித் திட்டத்தினை வழங்குகிறார்கள்.

### பயிற்சியின் நோக்கம்

ஆங்கில இலக்கணம் ஒரு புரியாத புதிராக இருக்கிறதே, இதனால் ஆங் கிலப் பாடங்களில் போதிய மதிப் பெண்கள் பெற முடியவில்லையே என வருந்தும் மாணவர்களுக்கு அடிப்படை யிலிருந்து தமிழ் மூலமாக ஆங்கில இலக்கணத்தை எளிய முறையில் சொல்லிக் கொடுத்து அவர்களை ஆங் கில மொழியில் புலமை பெறச் செய்ய வேண்டும் என்பதே இப்பயிற்சியின் முக்கிய நோக்கமாகும்.

### பயிற்சியின் சிறப்பு

- பொருள் தெரியாமல் எத்தனை நாட்கள் இந்த இங்கிலீஷ் சம்மரிகளை மனப்பாடம் செய்து எழுதுவது என்று வேதனைப்படும் மாணவர்கள் இப் பயிற்சியின் மூலம் ஆங்கில இலக்கணத் தை முழுமையாகக் கற்றுக் கொண்டு, சுயமாக ஆங்கிலத்தில் கட்டுரைகள் கடிதங்கள் எழுதும் ஆற்றலை நிச்சயம் பெற முடியும்.

- இங்கிலீஷ் மீடியத்தில் சேரத் தயங் கும் மாணவர்கள் இப் பயிற்சியினை முடித்தபின் தங்களது உயர் படிப்பி னைத் தயக்கமின்றி இங்கிலீஷ் மீடியத் தில் தொடரலாம்.

### பயிற்சி முறை

இப்பயிற்சியில் சேரும் மாணவர் களுக்குப் பாடங்கள் அனைத்தும் தபால் மூலமாக வீட்டிற்கே அனுப்பி வைக்கப் படும்.

பாடங்கள் அனைத்தும் ஓர் ஆசிரியர் உங்களிடம் நேரில் உரையாடுவதைப் போல மிகவும் எளிய முறையில் அமைக் கப்பட்டுள்ளன.

### பயிற்சியில் சேருவது எப்படி?

தபால் முறைப் பயிற்சியில் சேர்ந்து பயன் பெற விரும்பும் மாணவர்கள் தங்களது பெற்றோரது சம்மதத்துடன் கீழ்கண்ட முகவரிக்கு ஒரு போஸ்ட் கார்ட்டில் "கோடை விடுமுறைப் பயிற் சித் திட்டத்தில் சேர விரும்புகிறேன்" என்று எழுதி அனுப்பினால் போதும்.

பயிற்சி பற்றிய விபரங்களை நாங்கள் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

### நேர்முகப் பயிற்சி

நமது கல்வி நிலையத்தில் நேர்முகப் பயிற்சிக்கென சிறப்பு வகுப்புகளும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

சென்னையில் வசிப்பவர்கள் இச் சிறப்பு வகுப்புகளில் சேர்ந்துபயன் பெறலாம். வெளியூர் மாணவர்களுக்கு ஆஸ்டல் வசதி இல்லை.

இன்றே கீழ்க் கண்ட முகவரியில் தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்.

---

விவேகானந்தா கல்வி நிலையம்
"கோடை விடுமுறைப் பயிற்சித் திட்டம்"
9, நடேசன் தெரு, தி. நகர்,
சென்னை 600 017.

NAGA

Thooriga 56/EM-2

REGISTERED No. M. 43
Registered as Newspaper in Sri Lank

பல தேசப்
பெருமைகளை
முகத்திலே பிரதிபலிக்கும்
பேரெழில் பெண்மணி

குடிகூராவின் மூன்று இன்டர்நேஷனல் ப்யூட்டி டால்க்குகள். உலகின் சிறந்த நறுமணங்கள் நிரம்பியவை. பட்டுப்போன்று மென்மை யானவை. உங்கள் முகத்திற்குப் பேரெழில் சேர்ப்பவை. பல தேசங் களின் பெருமைகளின் சிறப்பை உங்கள் முகத்தில் பிரதிபலிக்கச் செய்பவை.




Cuticura
*International*
BEAUTY TALCS